# யாருக்குப் பொங்கல்

( வானொலியில் ஒலிபரப்பான கவிதை நாடகங்கள் )

ஆலந்தூர்
கோ. மோகனரங்கன்

வசந்தா பதிப்பகம்
6( ), முத்துக் குமாரசாமி சாலை,
ஆலந்தூர், :: சென்னை - 16.

முதற் பதிப்பு: 25—2—1973


## நாடகப் பட்டியல்



விலை ரூ. 3-50

## ஆசிரியரின் பிற நூல்கள்



அச்சிட்டோர்; செங்குந்தமித்திரன் அச்சகம், சென்னை-1,

தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் துணைத்தலைவர்,

சிலம்புச் செல்வர் **ம. பொ. சிவஞானம்** அவர்கள்

# வழங்கிய வாழ்த்துரை

கவிஞர். மோகனரங்கன், "யாருக்குப் பொங்கல்?" என்னும் தலைப்பில் எழுதிய நாடக இலக்கியத்தைப் பார்த்தேன், படித்தேன், மகிழ்ந்தேன். இந்நாளிலே இளங் கவிஞர்கள் ஏராளமாகத் தோன்றி வருகின்றனர். அவர்களிலே சிலரிடம்தான் வளர்ச்சிக்கான நல்ல அறிகுறிகளைக் காண்கிறேன். அவர்களில் கவிஞர். மோகனரங்கன் அவர்களும் ஒருவராவார். அவருடைய கவிதைகளைப் படிப்பதிலே எனக்குத் தனி ஆர்வம் உண்டு. கவிஞர். கு. சா. கிருஷ்ணமூர்த்தி இவரைப்பற்றி என் மனத்தில் நல்ல எண்ணத்தை உருவாக்கி வைத்திருக்கிறார்.

கவிதை நடையில் இயற்றியுள்ள இந்த நாடகம் சிறந்த இலக்கிய வகையில் ஏற்கத் தக்கதாகும். உரைநடையில் நாடகம் எழுதுவதே கஷ்டமான காரியம். மொழிப் புலமையோ எழுத்தாற்றலோ மட்டும் நாடகம் எழுதப் போதுமானவையல்ல. கற்பனை சக்தி கொண்டும் அன்பர் மோகனரங்கன் கவிதை நடையிலே இந்த நாடகத்தை யாத்துள்ளார். இது போன்ற இலக்கியங்கள் பலவற்றை இவர் தொடர்ந்து உருவாக்கவேண்டும். நாடும் இவரை ஆதரித்து இவரால் தமிழும், தமிழால் இவரும் முன்னேறுவதற்கு உதவி புரியவேண்டும்.

கவிஞர். மோகனரங்கத்திற்கு என் வாழ்த்துக்கள்.

புனித ஜார்ஜ் கோட்டை,<br>சென்னை - 9.<br>13—2—73.

ம. பொ. சிவஞானம்.

கலைமகள் ஆசிரியர்

## திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் வழங்கிய

# முன்னுரை

இப்போது எங்கேனும் இலக்கிய விழா நடந்தால் அங்கே இரண்டு நிகழ்ச்சிகள் நிச்சயமாக இருக்கும். பருப்பும் பாயசமும் இல்லாமல் திருமணம் நடவாதது போல, அந்த இரண்டு நிகழ்ச்சிகளும் இல்லாமல் விழாவுக்குச் சிறப்பு அமைவதில்லை. பட்டிமண்டபம், கவியரங்கம் என்ற இரண்டையுந்தான் சொல்கிறேன். பட்டி மண்டபத்தில் வாதாடும் ஆற்றல் வளர்ந்து வருகிறது. சில சமயங்களில் வெட்டி மண்டபமாகப் போவதும் உண்டு. ஆனால் கவியரங்கம் அப்படி அன்று. கவிகளில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம்; இலக்கண அமைதி இல்லாமல் இருக்கலாம். ஆயினும் கவிதை இயற்ற வேண்டும் என்ற முயற்சி எங்கும் பரவலாக இருக்கிறது. இது ஒரு வகையில் இலக்கியம் வளம் பெறுவதற்குரிய நல்ல அறிகுறி.

ஆனாலும், இவ்வாறு வரும் புதிய கவிதையில் சிலவற்றில் ஒரு பெரிய குறைபாடு இருக்கிறது. கவிதையில் உணர்ச்சி சொல்லழகு ஆகியவை இருந்தால் மட்டும் போதாது. வடிவம் நன்றாக அமையவேண்டும். அழுகைக்கும் புலம்பலுக்கும் என்ன வேறுபாடு? அழுகை ஒலியினால் துயரத்தைப் புலப்படுத்துகிறது, புலம்பல் சொல்லினால் அதனை வெளிப்படுத்துகிறது. ஒலியினால் வெளிப்படுத்துவதைவிடச் சொல்லினால் வெளிப்படுத்துவது சிறந்தது. கருத்துக்குச் சொல்வடிவம் கொடுத்துப் பேசுகிறோம்; உரைநடையாக எழுதுகிறோம். அதுபோலவே உணர்ச்சிக்கும் கருத்துக்கும் அழகான வடிவம் கொடுத்துக் கவிதையாக்குகிறார்கள். கவிதைக்கு வடிவம் இன்றியமையாதது.

எதுகை, மோனை, தளை, சீர், ஓசை எல்லாம் சரியாக இருந்து பாட்டில் உயிர் இல்லாமல் இருந்தால் அதுவும் கவிதை ஆகாது. பழங்காலப் பண்டிதர்கள் பலர் அருமையாகச் செய்யுள் பாடினார்கள். எதுகை, மோனை, ஓசை எல்லாம் இலக்கணப் பிழையில்லாமல் அமைந்திருக்கும். ஆனால் பாட்டில் உணர்ச்சி இராது. இப்போதோ சிலர் பாடும் கவிகளில் உணர்ச்சி இருக்கிறது. சில அழகான சொற்கோவைகள் இருக்கின்றன. ஆனால் வடிவம் அமைவதில்லை. அவை அழகிய உரைநடை வகையில சேர்க்கத் தக்கவை; கவிதையாவதில்லை.

ஓசை நயம் இலக்கண அமைதி இருந்தும் உணர்ச்சியும் கருத்து வளமும் இல்லாத கவிகளுக்கு உயிரில்லாத பிணத்தை ஒப்பாகச் சொல்லலாம். உணர்ச்சியிருந்தும் வடிவம் இல்லாத கவிதைக்கு ஆவி வடிவில் நடமாடும் பேயை உவமை கூற

லாம். இரண்டுமே விரும்பப்படுவன அல்ல. உணர்ச்சியும் கருத்தும் வடிவமும் அமைந்தவையே நல்ல கவிதைகள்.

அன்பர் திரு. கோ. மோகனரங்கன் அவர்கள் கவிதையில் இந்த இரண்டு வகை இயல்புகளும் பொருந்தியிருப்பதைக் காண்கிறேன். தனித்தனியாகப் பாடல்களை யாப்பவர்கள் மிகுதி. தொடர்நிலைக் கவிதையாக இருந்தால் மிக்க சுவை உண்டாகும்; பெருவிருந்து படைப்பதுபோல் ஆகும். சிறு கதை போலவும் நாவல்கள் போலவும் கதைக் கவிதையும் காப்பியமும் எழ வேண்டும். அப்போதுதான் இலக்கிய நிறைவு அமையும்.

இந்த நூலில் எட்டுக் கவிதை நாடகங்கள் அமைந்துள்ளன. நாடகமாக இருப்பதனால் தொடர்ச்சியான கதையைக் கருவாகக் கொண்டு அமைந்திருக்கின்றன இவை. கதை இருந்தால் பாத்திரங்கள் வரும்; உரையாடல் வரும். அவற்றில் பல வகை மன இயல் அமையும். அதனால் கவிதையின் சுவை ஏறும்.

இந்த நூலில் உள்ளவை யாவும் வானொலியில் ஒலிபரப்பப் பெற்றவை. கதைத் தொடர்பும் உரையாடலும் இருப்பதனால் படிக்கும் ஆசையைத் தூண்டுபவை. கேட்பவர்கள் உடனே சுவைக்கும் வண்ணம் நாடகம் இருந்தால்தான் வானொலி நாடகம் வெற்றி பெறும்.

இந்த நாடகங்களில் உள்ள, கதைகள் பல்வேறு பாத்திரங்களை நமக்கு அறிமுகப் படுத்துகின்றன. ‘தாய்மண்’ என்ற முதல் நாடகம் மூன்று சகோதரர்கள் மூன்று வேறு வகையில் வாழ்க்கையை நடத்திய கதை வருகிறது. அந்த மூவரையும் நமக்குக் காட்டும் கண்ணாடியாக வெள்ளையப்பன் வருகிறான்.

‘அன்புக்கடல்’ என்ற நாடகத்தில் தன் அண்ணனுக்காகப் பிறர் அறியாமல் உழைத்துச் சம்பாதித்து அவனுக்கு மிதிவண்டி வாங்கித் தரும் தங்கையைப் பார்க்கிறோம். அவளுடைய அன்பின் ஆழம் நாடகத்தின் இறுதியில் புலனாகிறது. இப்படியே மற்ற நாடகங்களிலும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டும் வேறுபட்டும் நிற்கும் பல பாத்திரங்களை இனம் கண்டு கொள்கிறோம்.

இந்த ஆசிரியர் பலவகையான பாக்களை ஓசை பிறழாமல் அமைத்திருக்கிறார். ஆசிரியப்பா, விருத்தம், கலிவெண்பா, சிந்து ஆகிய பாவினங்களை இந்த நாடகங்களில் ஆண்டுள்ளார். ஒரே மாதிரியான செய்யுளாக இல்லாமல் பலவகைச் செய்யுட்களைப் பயன்படுத்தியிருப்பதனால் நாடகங்களின் உரையாடல்களுக்குச் சுவை கூடுதலாகிறது.

பல அரிய ஆழ்ந்த கருத்துக்கள் உரையாடலினிடையே வருகின்றன. உரை நடையில் இருந்தால் அவற்றிற்கு அழகு இத்தனை இராது. கவிநடையில் இருப்பதால் உருட்டித் திரட்டிய மணிகளைப் போல ஒலிக்கின்றன.

பிறந்த மண்ணின்பால் உள்ள பாசத்தைத் 'தாய்மண்' நாடகத்தில வரும் வெள்ளையன் வெளிப்படுத்துகிறான்.

"பெருமைகள் பற்பல பெற்று நிமிர்ந்தால்
தவழ்ந்து வளர்ந்த தாய்மண் மறக்குமோ?"

"பெற்ற நாடும் பேணிய ஊரும்
சுற்றம் வாழும் சொந்த மண்ணும்
மறப்பவ ரெல்லாம் மனிதர்கள் தாமோ?"

திருவள்ளுவர் திருக்குறளில் உழவைப் பற்றிச் சொல்லும் போது நிலத்துக்குடையவன் தானே சென்று வேளாண்மையைக் கவனிக்கவேண்டும் என்று சொல்கிறார். அப்படிச் செய்யாவிட்டால் நிலம் நல்ல பயனைத் தராது.

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்"

என்பது குறள்.

அவ்வாறு செல்லாமல் இருந்து வளம் இழந்த ஒருவன், சென்றதை நினைந்து வருந்துகிறான், ஒருநாடகத்தில்.

"நெல்வயல் நுணுக்க மெல்லாம்
நிறையநான் அறிய வில்லை
சொல்லினை நம்பி நம்பித்
தொழிலாளர் பொறுப்பில் விட்டேன்,
நல்லவை செய்வார் போல
நம்பிக்கை வளர்த்தார்; பின்னர்
மெல்லவே அழிவு செய்து
மெலிந்திட வைத்து விட்டார்"

இது நாடகத்தில் வரும் செல்வம் என்பவனுடைய அனுபவம் மட்டும் அன்று; நிகழ்கால உலகத்தில் இப்படிச் சொல்லக்கூடியவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்.

தந்தை எவ்வளவு பொருள் சேர்த்து வைத்தாலும் ஒழுக்கம் இல்லாப் பிள்ளைகள் அந்தப் பொருளை நல்வழியில் பயன்படுத்தாமல் மனம்போனபடி நடந்து செலவிட்டுச் சீரழிவார்கள். அவர்கள் நல்வாழ்வுக்கு உரியதாக இருக்கவேண்டிய பொருள் அவர்களின் நாசவாழ்வுக்குக் காரணமாகி விடுகிறது. இதை வெள்ளையப்பன் சொல்கிறான்; உவமைகளைப் பெய்து கருத்தை விளக்குகிறான்:

"பெட்டியிலே பணம்வைத்துப் பிரிகின்ற தந்தையர்கள்
கட்டிவைத்த மூட்டையிலே கருந்தேள்கள் குடியிருக்கும்;
மட்டிகளாய் இருப்பவர்க்கு மண்தோண்டும் குழிவேண்டாம்;
கொட்டிவைத்த முன்னோரின் குவியல்களே அவர்க்கேற்ற
வெட்டிவைத்த பெரும்பள்ளம்; வேலியிட்ட முட்காடு;
நட்டுவைத்த நச்சுமரம்; நம்புகின்ற மண்குதிரை"

புதிய உவமைகளைப் பொருத்தமாக ஆள்கிறார் ஆசிரியர்.

"உன்தந்தை மாண்டவுடன் ஓலமிட்டுச் சாய்ந்துவிட்டேன்
மின்சாரம் பாய்ந்ததுபோல் வெந்து கருகிவிட்டேன்"

ஆண்களின் பெருமையை ஒருவன் உருவகங்களை அடுக்கடுக்காக அடுக்கிச் சொல்கிறான்.

"சமுதாயத் தேருக்குச் சரியான சாரதிகள்;
தரணியெனும் வயலுக்குத் தவழ்கின்ற மேகங்கள்;
சமைகின்ற புத்துலகின் தலைவாயிற் கோட்டைகள்;
சாகாத வரலாற்றில் தலைநிமிர்ந்த எழுத்துக்கள்"

தேர்வில் எழுதிய விடைத்தாள்களைப் பேராசிரியர் தருகிறார்.

"முடிந்துவிட்ட இவ்விடைத்தாள் மீண்டும் உங்கள்
முகம்பார்க்க வருகிறது; கதைகள் பேசிக்
கடந்துவிட்ட நாட்பயனை நீங்கள் காணும்
கண்ணாடி வருகிறது! பாரீர்! பாரீர்!

உழத்தி பட்டம்மா பேசுகிறாள்:

"தோளோடு தோள்நின்று கணவனுடன் பணிசெய்வேன்;
வியர்வையினை நீராக்கி ஊக்கத்தைத் தழையாக்கி
அயர்வில்லா உழைப்பினிலே அருநெல்லைப் பயிராக்கி
இஞ்சியுடன் மஞ்சளையும் எழில்வாழைக் கமுகினமும்
கொஞ்சவரும் செங்கரும்பும் கோடியெனப் பொருள்
செய்தேன்."

இவ்வாறு பல உவமைகளையும் உருவகங்களையும் அரிய கருத்துக்களையும் அங்கங்கே கண்டு மகிழலாம்.

நல்ல வடிவமும் சுவையான உரையாடலும் அமைந்த இந்த நாடகங்கள் பள்ளிக் கூட அரங்குகளில் ஏறுவதற்குரியன.

இவ்வாசிரியர் இன்னும் நீண்ட முழு வடிவ நாடகங்களும் காப்பியங்களும் எழுதித் தமிழுக்கு வளமூட்ட வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

'காந்தமலை'
சென்னை-28.
23—2—73

கி. வா. ஜகந்நாதன்.

# நன்றியுரை



வானொலிக்காக எழுதப்பட்ட எட்டுக் கவிதை நாடகங்கள் இத்தொகுப்பில் உள்ளன. கடந்த மூன்றாண்டுகளில் பல்வேறு காலங்களில் இவை வானொலியில் ஒலிபரப்பப் பட்டன. அன்றாட வாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகளையே கவிதை நாடகமாக்கி இருப்பதைக் காணலாம். முற்றிலும் யாப்பு மரபுகளை வைத்தே பல்வேறு சந்தங்களில் அமைத்திருக்கிறேன்.

கவிதை நாடகங்களை ஒலிபரப்பி ஆதரவளித்த சென்னை வானொலி நிலையத்தினருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வானொலியில் நாடகங்களைக் கேட்டு என்னைப் பாராட்டி மேலும் ஊக்குவித்த நண்பர்களுக்கும் என் நன்றி உரியது.

மேலவைத் துணைத்தலைவர், பெருமதிப்பிற்குரிய சிலம்புச் செல்வர் அவர்கள் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுடைய பேரன்பிற்கு நான் என்றும் நன்றி செலுத்தும் கடமை உடையவனாவேன்.

கலைமகள் ஆசிரியர், பெருமதிப்பிற்குரிய திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் முன்னுரை வழங்கியுள்ளார்கள். அவர்களின் அன்புள்ளத்திற்கு என் நெஞ்சார்ந்த நன்றி என்றும் உண்டு.

நல்லமுறையில் அச்சிட்ட செங்குந்த மித்திரன் அச்சகத்தினருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆலந்தூர் கோ. மோகனரங்கன்
23—2—73

# தாய்மண்

## காட்சி - 1

உறுப்பினர்கள் : **வெள்ளையப்பன், நெடியன்.**
இடம் : **பாதையோரம்**

**நெடி:** உள்ளம் அள்ளிய வெள்ளை யப்பனே?
பள்ளியில் பழகிய பழைய நண்பனே?

**வெள்:** மனங்கவர் நட்பினை மறந்தனை போலும்!
சுனைநீர் ஆடிய தோழமை நாட்கள்
நினைவில் உலர்ந்து நெஞ்சில் மறைந்ததோ?

**நெடி:** உணர்வில் கலந்தநல் உறவினை மறப்பதா?
தாமரைக் குளத்தில் தாவிக் குதித்ததும்
மாமர உச்சியில் மாங்கனி கவர்ந்ததும்
கழுதையின் வாலில் கட்டிய தகரமும்
பொழுதைக் கழிக்க ஓணான் முதுகு
வீங்கிட வைத்து விரட்டி யடித்ததும்
நீங்குமோ நெஞ்சில்? நீயறி வாயே!

**வெள்:** பிறந்த மண்ணைப் பிரிந்து சென்று
பறந்த ஆண்டுகள் பத்தினும் மேலாம்!
இருப்பினும் பழைய இனிய நினைவுகள்
திருப்பு கின்றாய் சிலிர்த்து நின்றேன்!

**நெடி:** இப்பொழு தாகிலும் இம்மண் உன்னை
எப்படி அழைத்ததோ? எனக்கோர் வியப்பே!

**வெள்:** அழகிய வளங்கள் அனைத்தும் இருந்தும்
பிழைப்பினைக் காட்டிடப் பிறந்தமண் மறுத்ததால்
நகரம் காண நடந்தது குடும்பம்!
பகைத்த வறுமையைப் பகைத்துக் கொண்டோம்
நலமும் வளமும் நாங்களும் பெற்றோம்!
மலர்ந்த முகங்கள் மனையில் சிரித்தன!

**நெடி:** ஏழைக் குடும்பம் ஏற்றம் அடைந்து
வாழும் வகையால் மகிழ்ந்தேன் நண்பனே!
மகிழ்ச்சியில் வாழும் வாழ்வினைப் பெற்றும்
இகழ்வாய் ஊரை ஏசி டாமல்
வருகை தந்தஉன் மனத்தினை வாழ்த்துவேன்!

**வெள்:** பெருமைகள் பற்பல பெற்று நிமிர்ந்தால்
தவழ்ந்து வளர்ந்த தாய்மண் மறக்குமோ?
நவமணிச் செல்வம் நாடிய போதும்
பெற்ற நாடும் பேணிய ஊரும்
சுற்றம் வாழும் சொந்த மண்ணும்
மறப்பவ ரெல்லாம் மனிதர்கள் தானோ?

**நெடி:** மறுத்திட இயலா வார்த்தைகள் அன்றோ!
பறந்தது காலம்; பாசம் மட்டும்
பறந்திடா வண்ணம் பண்புகள் வளர்த்தாய்!
மாறிடும் காலமும் மாற்றிட அரிதாய்த்
தேறினாய்; சிந்தனைத் தெளிவுடன் திரும்பினாய்!

**வெள்:** ஊரிலே புகுந்ததும் உணர்ச்சி வெள்ளம்
யாரும் தெளிவாய் அறிந்திலர் என்னை!
சிறுவனாய் இங்கே திரிந்த போது
நறுமலர்ப் பொய்கை நல்கிய உணர்வை
இன்றும் அடைந்தேன்; என்னையே மறந்தேன்!
அன்றுநான் பார்த்ததும் இன்றுநான் பார்ப்பதும்
எத்தனை மாற்றம்! எத்தனை மாற்றம்!

புத்தெழில் காட்டும் புதுமணப் பெண்போல்
செழித்து விளங்கும் சிற்றூர் கண்டேன்
கொழிக்கும் வளங்கள் கொஞ்சிடும் பொழில்கள்
சிரித்த முகமெனச் சிந்திய புன்னகை
விரித்த கனவில் விண்ணில் பறந்தேன்!
வறுமை நடந்த வறண்ட நிலங்கள்
பொறுப்பை உணர்ந்த பொலிவினைக் கண்டேன்.

**நெடி:** மண்ணிலே மட்டும் மாற்றம் இல்லை;
எண்ணிலாப் பலரும் ஏற்றனர் மாற்றம்!
பழைய வாழ்வின் பயணம் மாறி
விழைபவர் மனம்போல் விதவித மாற்றம்
சிற்றூர் எங்கும் திகழ்ந்திடக் காண்பாய்!

வெள்: பற்பல மாற்றம் பரவிய துணர்ந்தேன்
பழகிய மனிதரைப் பார்த்து மகிழ்ந்து
பொழுதைக் கழித்திடப் புறப்பட் டேனே!



# காட்சி - 2

உறுப்பினர்கள் : வெள்ளையப்பன், கறையன்.

இடம் ; வீட்டு முற்றம்

கறை: வெள்ளையனோ?

வெள்: ............ஆமய்யா! வெள்ளையன்தான் வருகின்றேன்

கறை: வெள்ளரிக்காய் திருடிவிற்ற வெள்ளையன் அல்லவோ?

வெள்: மாடுமனை வாங்கிடவோ மறைவாகத் திருடிவிட்டேன்?
வாடியஎன் வயிற்றுக்கு வருந்திசிறு தவறிழைத்தேன்!
காணுகின்ற உன்முகத்தில் கவலைகளின் ஆட்சியென்ன?
மேனி இளைத்ததென்ன? மிடுக்கழிந்து
சோர்ந்ததென்ன?
மாமன்னர் மகுடம்போல் வாழ்ந்திருந்தார் உன்தந்தை
சீர்மண்டும் பெருஞ்செல்வம் திரட்டிவைத்தும்
வாடுவதேன்?
பொன்குவித்த மனையினிலும் புயலெழுந்து
சாய்த்திடுமோ?
என்னஉன் வரலாறு? ஏனிந்த ஊமைநிலை?

கறை: கேட்பதுவோ பிறர்க்கெளிது! கேட்டவுடன்
துன்பமெலாம்
வாட்களென மாறிவந்து வாட்டுவதை யாரறிவார்?
வருந்துகின்ற என்மனத்தை வார்த்தைகளில் காட்டிவிட
ஒருசொல்லால் ஒருபொழுதால் உரைத்திடவும்
இயன்றிடுமோ?

வெள்: முடிந்தவரை சொல்லப்பா; முள்ளுக்குள் தனியாக
நடந்தாலும் துணையாக நானுனக்கு வருகின்றேன்!

கறை: மாளிகையின் மேலிருந்தோம்; வான்முட்ட
வாழ்ந்திருந்தோம்!
தாளிரண்டைத் தொழுதபடி தலையாட்டும்
பொம்மைகளாய்

இவ்வூரார் இருந்தநிலை எல்லாமே நீயறிவாய்!
அவ்வாறு வாழ்ந்தநிலை அப்பாவின் பொற்காலம்!
மைந்தர்கள் தலையெடுத்தோம் மனையினிலே
களம்அமைத்தோம்
செந்தேனின் இருப்பிடத்தில் தீப்பொறியின் அரசாட்சி
ஒற்றுமைக்கு வழியின்றி உடன்பிறந்தோர்
போரிட்டோம்
பற்றுகளை முறித்துவிட்டுப் பாசத்தைக் கொன்று
விட்டோம்
பணப்பெட்டி நினைவினிலே பண்பனைத்தும்
இழந்துவிட்டோம்
தனிக்குடியாய்ப் பிரிந்துவிட்டோம்; தளர்ந்தநிலை
யறியாமல்
மூவருமே தனிக்குடும்ப முத்திரைகள்
பொறித்துவிட்டோம்
ஓவியமாய் இருந்தவர்கள் உருக்குலைந்து
போய்விட்டோம்

வெள்: ஏனய்யா கலங்குகின்றீர்? எத்தனையோ உடன்பிறந்தார்
வானளக்கும் செல்வத்தை வளைப்பதிலே போட்டியிட்டு
திசைமாறி நிற்பதனைத் தினந்தோறும் காணுகின்றோம்
இசைவாக இருந்தவர்கள் எப்படியோ மாறுபட்டு
சொத்துக்கள் பிரிப்பதிலே சுழகாற்றாய் இருக்கின்றார்
பித்தாகிப் புலம்புகின்றீர் பிழைசெய்த பின்னாலே!

கறை: ஒருபிழையாய் இருந்திருந்தால் உடல்பதறி
நான்கலங்கேன்
எரிநெருப்பாய் என்செயலே எனைவாட்டும்
நிலையடையேன்
வானத்து வில்லுக்கு விலைவிசித் தோற்றுவிட்டேன்!
ஈனத்தை விலைபேச இதயத்தை விற்றுவிட்டேன்!
கருநாகப் புற்றுக்குள் கடல்முத்தை
எறிந்துவிட்டேன்
நான்குதிசை நாடகத்தில் நஞ்சுக்கே நானடிமை
தேன்குடிக்கப் போனஇடம் தேள்உலவும்
கொடியஇடம்

வெள்: என்னபிழை செய்துவிட்டாய்? ஏனிந்த மனக்குமுறல்?
சொன்னால் சுமைகுறையும்; தோன்றும்ஓர் ஆறுதலே!

கறை: உடன்பிறந்தார் பிரிவினையால் ஒப்பற்ற
பெருஞ்செல்வம்
கடல்அளவாய் இருந்ததெலாம் கையளவாய்
ஆயிற்றே!
பேராசை வெறியெழுந்து பித்தாக்கி வைத்ததனால்
நேரான வழிமறந்து நெஞ்சம்போல் செயல்பட்டேன்
சூதாட்டம் ஆடுவதில் சொத்துவந்து சேராதோ?
ஆதரவு கிட்டாதோ? அரசநலம் எட்டாதோ?
கணப்பொழுதில் பெரும்பணமும் கண்ணாடி
அரண்மனையும்
நினைத்தவுடன் தோன்றாதோ? நெடுவையம்
வியக்காதோ?
ஒன்றுக்குப் பத்தாகும் ஒருநூறு பலநூறும்
என்றெண்ணிக் கன்று குதிப்பதுபோல் குதித்திருப்பேன்
சிலநேரம் வெற்றிவரும்; சிரிப்புடனே நாள்நடக்கும்!
பலநேரம் தோல்விவரும்; பணமிழக்க நான்அஞ்சேன்!
பதினெட்டு முறைமட்டும் படையெடுத்த
கஜினிமன்னன்
எதிர்வந்து நின்றுவிட்டால் எனக்கவனும்
தோற்றிடுவான்!
ஓயாமல் சூதாடி ஒருநாள்நான் ஓய்ந்துவிட்டேன்
தீயான வறுமைக்குச் சீரான உணவானேன்!
பொன்கரைந்து போனதுடன் போயிற்றே என்மானம்
என்குடும்பம் இளைத்திளைத்தே வாடுவதை
என்சொல்வேன்!

வெள்: பேராசை வெள்ளத்தில் பெருமரம்போல்
சாய்ந்துவிட்டீர்
நீரோடும் கண்ணோடு நிலம்பார்த்து நிற்கின்றீர்!



# காட்சி - 3

**உறுப்பினர்கள் : வெள்ளையப்பன், வில்லாளன்**
**இடம் : வாய்க்கால் ஓரம்**

(வில்லாளன் வானைப் பார்த்தபடி அமர்ந்திருக்கிருன்.)

**வெள்:** விண்ணுக்கு நீயனுப்பும் செய்தி யென்ன?
வில்லாளா, எதிர்வந்து நிற்கின் றேனே!
கண்ணுக்குத் தெரியாத தென்ன? அன்று
கைகோத்து நடந்தோமே! உடம்பில் உள்ள
புண்ணுக்கு மருந்திடவும் கூடா தோ? உன்
பொன்மேனிக் கென்னப்பா? நாண மெல்லாம்
பெண்ணுக்கு வருமென்பார்; என்னை மட்டும்
பேசவைத்து நீபேசா திருப்ப தென்ன?

**வில்:** பட்டமரம் பேசுவதா? புழுதி மேட்டில்
படுத்தமலர் ஆடுவதா? தேய்ந்து தேய்ந்து
கெட்டநிலா ஆகிவிட்டேன்; இனிமேல் வாழ்வில்
கீழ்வானம் சிவக்காது; கோடை நாளில்
கொட்டுமழை வரக்கூடும்; ஆனுல் என்றன்
குடும்பவயல் செழிக்கின்ற மழைதான் ஏது?
நட்புறவு காட்டவந்தீர்; அந்த நாளில்
நாடிவந்து பார்த்திருந்தால் கெடுவே ஞநான்?

**வெள்:** கெட்டாயோ என்நண்பா? அந்தோ! இந்தக்
கீழ்நிலையில் காண்பதற்கோ வந்தேன்? நஞ்சைத்
தொட்டாயோ? தொடர்ந்தாயோ? உன்றன் அண்ணன்
சூதாடிக் கெட்டழிந்தான்: நீயும் தீமை
நட்டாயோ எனஎண்ணி நடுங்கு கின்றேன்!
நல்லமொழி கூருயோ? ஒழுக்க மெல்லாம்
விட்டாயோ வீணருக்கே நெஞ்ச மெல்லாம்
விற்ருயோ? நல்லறத்தை என்ன செய்தாய்?

வில்: கொன்றுவிட்டேன்; குழிதோண்டிப் புதைத்துவிட்டேன்;
குடிகெடுக்கும் கொடியவரின் பாதம் தாங்கச்
சென்றுவிட்டேன்; சிந்தனையை நிறுத்தி விட்டேன்;
திசையெட்டும் மறந்துவிட்டேன்; உடனி ருந்தோர்
வென்றுவிட்டேன் என்றார்கள்; விழித்துப் பார்த்தேன்
வீதியிலே தனியானேன்; அணைப்பா ரின்றி
நின்றுவிட்டேன்; செய்தபிழை எண்ணி விட்டேன்;
நிகழ்கால ஈட்டியினை ஏற்று விட்டேன்!

பிறந்துமொழி படிக்குங்கால் உன்றன் தோளைப்
பிரியாமல் நானிருப்பேன்; வளர்ந்த பின்னே
திறந்தவெளி வாழ்க்கையினைக் காண வில்லை!
சிறைச்சாலை என்வீடு; பெற்ற தந்தை
திறந்தவிழி மூடாமல் காவல் செய்வார்!
சில்லறைகள் எண்ணியெண்ணி வைப்ப தற்கும்
பறந்திடாமல் பணப்பெட்டி காப்ப தற்கும்
பகலிரவு பணிசெய்ய வைத்தி ருந்தார்!

தந்தையார் மாண்டவுடன் உடன்பி றந்தார்
சண்டைகளால் தனித்தனியே பிரிந்து விட்டோம்
சிந்தையிலே உலகத்தைப் புரிந்து கொள்ளும்
தெளிவில்லை! மனம்போல அலைந்தி ருந்தேன்
சொந்தமனை மக்களெலாம் தவிக்க வைத்தேன்!
சொத்திழந்தேன்; நோயாளி ஆகி விட்டேன்
கந்தைக்கும் கூழுக்கும் ஏங்கு கின்றேன்
கண்டபிணி போக்கிடவும் வகையி ழந்தேன்!

வெள்: வாழ்முறை தெளிந்தாயோ? கிளியி ருக்க
வான்பருந்து நட்பாமோ? கொல்லு கின்ற
ஆழமப்பா இவ்வுலகம்; அடியிற் சிக்கி
அழிந்தாயே என்நண்பா! பள்ளிக் காலத்
தோழமையால் துடிக்கின்றேன்; தாய்மண் ணுக்கே
சுமையாக மாறினையோ அந்தோ! தங்கப்
பேழையின்று நிலைமாறிக் கிடப்ப தோ? என்
பேராவல் நெஞ்சமெலாம் பதறு தையோ!

## காட்சி - 4

**உறுப்பினர்கள்: வெள்ளையன். செல்வம்.**
**இடம்: ஆலமரத்தடி!**

**செல்:** வெள்ளையா வாவா! என்ன
வேலையாய் வந்தீர் ஐயா?
பிள்ளையாய் இருந்த போது
பிரிந்தவர் திரும்பி வந்தீர்!
துள்ளிய பருவந் தன்னில்
சுமந்தமண் மீண்டும் உம்மை
அள்ளியே அணைக்க எண்ணி
அழைப்பினை விடுத்த துண்டோ?

**வெள்:** ஐந்திலே தவழ்ந்த மண்ணை;
அன்னையைச் சுமந்த மண்ணை;
சிந்தனை ஊட்டிக் கல்விச்
செழிப்பினைச் சேர்த்த கண்ணை;
வந்தனை செய்து வாயால்
வாழ்த்தியே போக வந்தேன்!
முந்திய உறவும் நட்பும்
முகங்களைக் காட்டக் கண்டேன்!

மூத்தவர் இருவர் வாழ்வை
முற்றிலும் அறிந்து வந்தேன்;
கூத்துகள் பலவும் ஆடிக்
குடைசாய்ந்து வீழ்ந்தார்; முன்னோர்
சேர்த்தநல் செல்வம் யாவும்
சிதறிடச் செய்து விட்டார்!
காத்துநீ வைத்துள் ளாயோ?
காற்றினில் இரைத்திட் டாயோ?

**செல்:** அளவிலாச் செல்வம் பெற்ற
அப்பாவின் மறைவுக் குப்பின்

உளமெலாம் வேலை செய்ய
ஒப்பவே இல்லை ; பின்னால்
விளைவினைப் புரிந்தி டாமல்
வேலையை உதறி விட்டேன்
வளமெலாம் ஆள எண்ணி
வந்தனன் சிற்றூர் நோக்கி !

பிணக்குகள் நேர்ந்த தாலே
பிரிந்தன நிலங்க ளெல்லாம்
இணக்கமே இன்றி மூத்தோர்
இருவரும் பகைக்க லானார்
வணக்கமாய்ச் சென்ற போதும்
வாய்மொழி பேசி டாமல்
பணத்தையே எண்ணி நின்றார்
பண்புகள் இழந்து விட்டோம் !

நெல்வயல் நுணுக்க மெல்லாம்
நிறையநான் அறிய வில்லை ;
சொல்லினை நம்பி நம்பித்
தொழிலாளர் பொறுப்பில் விட்டேன் !
நல்லவை செய்வார் போல
நம்பிக்கை வளர்த்தார் ; பின்னர்
மெல்லவே அழிவு செய்து
மெலிந்திட வைத்து விட்டார் !

வேலைகள் செய்தால் செல்வ
மேன்மைக்கோர் இழிவே என்று
மூலையில் கிடந்தேன் ; நெஞ்சில்
முளைத்ததோர் செருக்கி னாலே
சோலையாய் இருந்த செல்வம்
சொல்லாமல் நடக்கக் கண்டேன் !
மாலையாய் இரவாய் வாழ்க்கை
மங்கிய நிலைய டைந்தேன் !

வெள்: முக்கனி போன்று நீங்கள்
மூவரும் வாழ்வீர் என்றே
எக்களிப் போடு வந்தேன்
ஏமாற்றம் தழுவக் கண்டேன்
தக்கநல் அறிஞர் சொல்லைத்
தலைபணிந் தேற்றி ருந்தால்
சிக்கலே இல்லை; மூவர்
சிதைந்ததும் தேவை யில்லை!



# காட்சி - 5

உறுப்பினர்கள் : **சின்னையன், வெள்ளையப்பன்.**
இடம் : **வீட்டு முற்றம்.**

**வெள்:** என்னய்யா சின்னையா, எல்லோரும் நலந்தானு ?
கண்ணிலொளி மாறவில்லை ; கட்டுடலும் தேயவில்லை !

**சின்:** வயிற்றுக்குப் பசியில்லை ; வருவாய்க்குத் தடையில்லை
அயர்வுக்கும் இடமில்லை ; ஆறுதலும் தேவையில்லை !
எளியவர்கள் எப்போதும் இருப்பதுபோல்
இருக்கின்றோம் !

**வெள்:** களிப்புடனே இருக்கின்ற காட்சியொன்று போதாதோ ?
ஊராரின் வாழ்வுக்கே உன்தந்தை விளக்கேற்றி
சீராகச் செய்தபணி சிந்தையிலே நிலைத்திருக்கும்
சிற்றூரின் பள்ளியிலே சிறப்பான ஆசானுய்க்
கற்கவரும் சிறுவர்க்குக் கல்விநலம் ஊட்டியவர்
இருண்டமனக் காடுகளில் ஏற்றிவைத்த ஒளிவிளக்கை
தெரிந்தவர்கள் வாழ்த்திடுவார் ; சிரந்தாழ்த்தி
வணங்கிடுவார் !

**சின்:** ஊரிலுள்ளோர் முன்னேற ஓயாமல் உழைத்திருந்தார்
பேரறிவும் அறநெறியும் பிணைகின்ற வாழ்க்கைக்குப்
பாதையிட்டார் ; பலரதிலே பயணத்தைத்
தொடர்ந்தார்கள்
பேதைகளாய் இருந்தவர்கள் பிழைசெய்து தாழ்வுற்ருர் !

**வெள்:** பொழுதெல்லாம் பிறர்பணிக்கே போக்கியவர் ;
குடும்பத்தார்
பிழைப்பதற்குச் சிறிதேனும் பொருள்சேர்த்து
வைத்ததுண்டோ ?

**சின்:** அவர்சேர்த்த பொருளெல்லாம் யாருக்கும் தெரியாது
புவியினிலே பொன்சேர்ப்பார் மண்சேர்ப்பார்
பார்த்திருப்பீர்

எம்தந்தை எம்நெஞ்சில் ஏராளம் சேர்த்துவைத்தார்
இந்நிலத்தில் வாழ்வதற்கே இணையற்ற அறிவுரைகள்
நாள்தோறும் சொல்லிவைத்து நலஞ்சேர்த்துப்
போனதனுல்
வாள்போலத் துயர்வந்து வழிமறிப்ப தில்லையெமை!
ஓட்டுமனை ஒன்றேஎன் முன்னேர்கள் வைத்தநிதி
ஈட்டியதில் மீதமொன்றும் எம்தந்தை வைக்கவில்லை
பழஞ்சொத்தை அழிக்காமல் பார்த்திருந்த
அவர்திறத்தை
தொழுதிருக்க யாம்மறவோம்; சொன்னவழி
நடக்கின்ருேம்!
குறையேதும் எமக்கில்லை; குடும்பநலம் குன்ருமல்
நிறைவோடு வாழ்கின்ருேம்; நெஞ்சத்தில்
ஒளிகண்டோம்

வெள்: இரக்கமின்றி பிறர்வயிற்றில் எரிநெருப்பைக்
கொட்டிவிட்டுப்
பெருக்கமுடன் சேர்ப்பதனுல் பிள்ளைகளுக்
காவதென்ன?
மடையர்களே மைந்தர்களாய் வாய்த்துவிட
நேர்ந்துவிட்டால்
முடிமன்னர் நவநிதியும் முறைகெட்ட வழிசெல்லும்!
வாழுமுறை உணர்த்தாமல் வைத்தநிதி பயனில்லை
தாழ்ந்தழிவார் அவர்மக்கள்! தலைகுனிவார் வையத்தில்!
பெட்டியிலே பணம்வைத்துப் பிரிகின்ற தந்தையர்கள்
கட்டிவைத்த மூட்டையிலே கருந்தேள்கள்
குடியிருக்கும்
மட்டிகளாய் இருப்பவர்க்கு மண்தோண்டும்
குழிவேண்டாம்
கொட்டிவைத்த முன்னேரின் குவியல்களே
அவர்க்கேற்ற
வெட்டிவைத்த பெரும்பள்ளம்; வேலியிட்ட முட்காடு;
நட்டுவைத்த நச்சுமரம்; நம்புகின்ற மண்குதிரை;
நல்லொழுக்கம் வளர்க்காமல் நாணயங்கள்
சேர்த்துவைத்தால்

எல்லையிலாப் பழிச்சுமையால் இளையவர்கள்
அழிவார்கள்
சொத்துவைக்க மறந்தாலும் தூயமனம்
வளர்த்துவைத்துப்
பித்துலகில் பிழைசெய்யாப் பேரறிவு தந்தவரைத்
தந்தையெனும் சிறப்புற்றீர்; தகைசான்ற வாழ்வுற்றீர்
சிந்தையெலாம் மகிழ்கின்றேன்! சிற்றூரை
வாழ்த்துகின்றேன்
தலைநிமிர்ந்த உன்வாழ்வால் தாய்மண்ணும்
தலைநிமிரும்!
நிலைஉயர்ந்த பண்புமனம் நிலத்தினையும்
உயர்த்திடுமே!



# அன்புக் கடல்

## காட்சி - 1

உறுப்பினர்கள்: பணிமனைத் தலைவர், அன்பரசன்.
இடம்: பணிமனை.

ப. த: (ஏளனமாக)
வருக ஐயனே! வருக! வருகவே!
தருக நல்லருள்! தலைகள் தாழ்த்தினோம்!

அன்: ......... ......... .........

ப. த: திருவாய் இன்னும் திறக்க வில்லையே?
பெருமைகள் சிதைக்கும் பிழைசெய் தோமோ?

அன்: ஐயனே எனக்கோர் அடைக்கலம் நீங்கள்!
வையகந் தன்னில் வழிவே றறியேன்!
வண்டிகள் ஒழுங்காய் வருவதே இல்லை
நின்று நின்றே நேரம் கழிந்தது
விரைந்து நடந்து பணிமனை வந்தேன்!

ப. த: தரையைப் பார்க்கும் தலையை நிமிர்த்து!
கலங்கிடும் கண்ணும் புலம்பிடும் வாயும்
காட்டிக் காட்டிக் கதைபுனை யாதே!
குறித்த வேளையில் வருவதே இல்லை
நெறித்த புருவமும் நெருப்பு விழிகளும்
என்ன செய்திடும் என்ற துணிவோ?

உன்மன ஆணவம் ஓட்டுவேன் பாராய்!
இரும்புத் தலையனே, எத்தனைக் கூறியும்
வருந்தி வேளையில் வருவதே இல்லை!

அன்: ஐயனே பொறுப்பீர்! அடியவன் பிழையினை!
மெய்யெலாம் நடுக்கம் மிகுந்திடக் காண்பீர்!
இப்பணி ஒன்றே எனதுயிர் ஆகும்!
எப்படி மறப்பேன்? இனிமேல் தவறேன்!
தலைவர் பாதமே தஞ்சம் ஆகுமே!

ப. த: வளைந்த உடம்பும் வணங்கிய கையும்
சுருங்கிய மொழியும் தோன்றிடச் செய்தால்
ஏய்க்கலாம் என்ற இழிந்த நினைவினி
வாய்த்திடா தென்றும் வாலினை நறுக்குவேன்!
நேரங் கடந்தால் நீவர வேண்டாம்
பாராய் வேறிடம்; பணிஉனக் கில்லை!
இதுவே இறுதிநாள்; என்முன் நிற்காதே!



# காட்சி - 2

உறுப்பினர்கள் : அன்பரசன், அவன் தாய் கற்பரசி.
இடம்: இல்லம்.

கற் : அன்பரசா, உன்றன் அழகுமுகம் வாடியதேன்?
என்ன மனத்துயரம்? என்னிடமும் சொல்லாயோ?
இன்பம் எமக்கென்றே எப்போதும் வைத்திடுவாய்!
துன்பம்நீ ஏற்றுத் துடிப்பதுவே உன்பழக்கம்
உள்ளத் துயரம் உரையாயோ என்மகனே?
பிள்ளைக் குணமறிவேன்; பெற்றவளும் நானுவேன்
பின்னும் மறைக்கின்ருய்! பேசா திருப்பதென்ன?

அன்: என்ன உரைப்பதம்மா? என்றும்போல் நிற்பவனை
சொல்லென்று கேட்கின்றீர்: சொல்ல மொழியறியேன்!

கற் : ஆணிப்பொன் தொட்டிலிலே ஆராரோ பாடவில்லை
மாணிக்கப் பாலாடை மைந்தனுக்கு வாங்கவில்லை
வைரநகை பூட்டி வடிவழகு செய்ததில்லை
நெய்யொழுகும் பண்டங்கள் நீயுண்ணப்
பார்த்ததில்லை
ஏழெட்டுத் தாதியர்கள் ஏந்தி வளர்க்கவில்லை
ஏழைக் குடிசைக்குள் எப்படியோ நீவளர்ந்தாய்
ஆனாலும் பெற்றவர்மேல் அன்பு குறையவில்லை
கோணுமல் இந்தக் குடும்பநலம் காக்கின்ருய்!

அன் : முத்து மணிநகையால் மூடி வளர்க்கவில்லை
பத்து வகைப்பண்டம் பண்ணித் தரவில்லை
ஆகையினுல் நான்உம்மை ஆதரிக்க வில்லையெனில்
தேகம் இருந்தென்ன? செத்தொழிதல் நன்றன்றே!

கற் : உன்தந்தை மாண்டவுடன் ஓலமிட்டுச்
சாய்ந்துவிட்டேன்
மின்சாரம் பாய்ந்ததுபோல் வெந்து கருகிவிட்டேன்!
நம்பிக்கைப் பூக்கள் நகைக்காத நாளினிலே

கும்பி எரியும் கொடும்பசியின் வாசலிலே
காலம் அளித்துவிட்ட கண்ணீர் விலங்குடனே
பாலே வனப்பயணம் பற்றி இழுக்கையிலே
தோளில் தவழ்ந்தவன் துள்ளி எழுந்துவிட்டாய்!
பட்டம் பறக்கவிடும் எட்டு வயதுமகன்
கொட்டும் வறுமையினுல் கட்டத் துணியின்றி
வேலை தினம்தேடி வீதியெலாம் சுற்றிவந்தாய்
ஆலைக் கரும்பாகி அன்றுடம் சோறளித்தாய்!

அன்: மூத்தமகன் நானன்றே? முற்றும் குடும்பத்தைக்
காத்து வளர்த்தல் கடமையென ஏற்றுவிட்டேன்!

கற்: தம்பி படிப்பதற்கும் தங்கை படிப்பதற்கும்
பம்பரமாய் நீஉழைத்த பாங்கெல்லாம் நானறிவேன்
சந்தனமாய்த் தேய்ந்த தலைமகனே, உன்பண்பைச்
சிந்தித்தால் மெய்சிலிர்க்கும்; சிந்தையெலாம்
தித்திக்கும்!
இன்றென்ன வாட்டமப்பா? என்னுயிரே
சொல்லப்பா?
உன்தம்பி-கல்லூரிக் கட்டணந்தான் காரணமோ?
உன்தங்கை கேட்ட ஒளிச்சேலை காரணமோ?
உப்பு மிளகாய்க்கும் உண்ணும் அரிசிக்கும்
எப்படியோ என்றெண்ணி ஏக்கந்தான் கொண்டாயோ?

அன்: அன்னை அருகிருக்க அன்புரைகள் கேட்டிருக்க
துன்பச் சுமையேது? சோர்வும் எனக்கேது?

கற்: மெல்ல மழுப்புகிருய்; மீண்டும் மறைக்கின்றுய்!
சொல்ல மறுப்பதனுல் சோர்வு தெரியாதோ?
அத்தி புரத்துப்பெண் எத்தனைநாள் காத்திருப்பாள்?
நித்தம் உனக்காகப் பத்துமுறை வந்தார்கள்!
பெண்வீட்டார் வாடுகிருர்; பேசா திருப்பதென்ன?
கண்ணில் மணக்கோலம் காணத் துடிக்கின்றேன்!
சொல்மகனே ஒப்பி ஒருவார்த்தை சொல்மகனே!

அன்: இல்லாமை நம்வீட்டில் இல்லையெனும் நாள்வரைக்கும்
என்மணத்தை எண்ணுதீர்; இன்னும் புதுத்தொல்லை
பின்னிப் பிணைப்பதற்குப் பேராவல் கொள்ளாதீர்!
காலத்தின் காலடியில் நான்கிடந்து தேய்கின்றேன்
ஓலத் துயர்முற்றும் ஓயவில்லை நம்வீட்டில்!
வல்லமையைத் தேடுகின்றேன்; வாய்க்கவில்லை
அந்தநிலை!
நல்ல மிதிவண்டி நான்வாங்க எண்ணுகிறேன்
என்ன முயன்ருலும் ஏழை முயற்சியன்ரே?
வெண்ணெ கரைவதுபோல் எண்ணம் கரைகின்றேன்!
செல்லும் பணிமனைக்கு நேரத்தில் செல்வதில்லை
எல்லோர் நகைப்புக்கும் எப்போதும் ஆளாவேன்
இந்தநிலை மாற்றிட என்ருல் இயலவில்லை!
சிந்தை தடுமாறித் தேயும் எனக்கும் ஓர்
இல்லறத்தைத் தேடி இடுப்பொடிய வைக்காதீர்
பல்லோர் பழிப்பார்கள் பார்த்து!



# காட்சி - 3

உறுப்பினர்கள் : அன்பரசன், அறிவொளி.

இடம் : அன்பரசன் இல்லம்

அறி : அண்ணனே, உங்கள் ஆவலை முடிக்க
எண்ணிய காலம் இன்றே வந்தது!
மாமழை கொட்டும் வான்முகில் போலத்
தேமழை பெய்திடச் சிந்தை விழைந்ததே!

அன் : அறிவொளி, என்ன அளக்கிறாய் இன்று?
நிறைவொளி முகமும் நிகரிலா மகிழ்வும்
சொற்களில் துடிப்பும் தோன்றுவ தென்ன?

அறி : கற்கள் மிகுந்த கடுவழிப் பயணம்
தொடர்ந்து நடக்கத் துணிந்தவர் தம்மிடம்
படர்ந்த என்றன் அன்பன் பரிவு!
நெருநாள் உங்கள் நெஞ்ச ஏட்டிலே
பதிந்துக் கிடந்த பாட்டினை அறிந்தேன்!

அன் : என்னுடன் பிறந்த இனியனே, உன்றன்
அன்புரை ஒன்றும் விளங்க வில்லையே!

அறி : புதிய மிதிவண்டி வாங்கி பயிற்றிட
நிதியுடன் வந்தேன் : நினைத்தது முடிப்பீர்!
கல்லூரி வழங்கிய கல்விச் சலுகையால்
உள்ளம் உவக்க இருநூறு பெற்றேன்!
இன்றே வண்டி இனிதாய் வாங்குவோம்

அன் : நன்றே மொழிந்தாய் : நான்மிக மகிழ்ந்தேன்!
வண்டி வாங்கிட வாய்த்தது இதுவோ?
அன்னையின் உடலில் மண்டிய பிணியால்
கைப்பொருள் இன்றிக் கலங்குகின் றேனே!
எப்படி அன்னையின் இன்னுயிர் காப்போம்?
சிறந்த மருத்துவம் செய்து பார்த்திட

நிறைந்த பணத்தினை நெஞ்சு தேடிய
நல்ல வேளையில் நல்லுயிர் காத்தாய்!
சொல்லினால் என்றன் துயரம் தேற்றினாய்
அனைத்துப் பொருளும் அன்னையைப் பேணிட .
மனத்துள் நினைத்தேன்! மகிழ்வாய் வழங்குக!

அறி : அன்னையைக் காப்பதில் அளவிலா மகிழ்ச்சி;
என்றன் எண்ணம் இவ்விதம் தோற்றதில்
வருத்தமும் உண்டு; வாடிடும் வாழ்க்கையே
பொருத்தமாய் நமக்கெலாம் பூத்ததே அன்று!

அன் : பெரியதோர் உலகெனப் பேசுவோர்; ஆனால்
சுருங்கிய உலகம்; சூழ்ச்சியின் நிலையம்!
வறுமையின் தோழராய் வளர்ந்த நமக்கு
மறுத்திடும் இன்ப மாளிகைக் கதவுகள்!
துன்ப மாலையில் தொடுக்கும் பூக்கள்
இன்ப மேடையில் ஏறுவ துண்டோ?

அறி : ஏழைகள் என்றால் எல்லாக் கனவுமே
ஆழக் குழியில் அடக்க மாகுமோ?
நினைவுகள் யாவும் நிகழ்ந்திடக் கண்டு
மனம்போல் மகிழும் வாழ்க்கையும் வருமே!



## காட்சி - 4

**உறுப்பினர்கள் : அன்பரசன், மின்னொளி.**

**இடம் : அன்பரசன் இல்லம்**

**மின் :** அன்பெனும் நிழலாய் எம்மை
அகலாமல் காக்கும் அண்ணா,
இன்னமும் உங்கள் தோளில்
இறங்காத சுமையாய் ஆனேன் !
என்னையும் படிக்க வைத்தீர் ;
இளங்கலை தேற வைத்தீர்
என்னதான் பயனைக் கண்டீர் ?
எனக்கொரு வேலை இல்லை !

**அன் :** வேலையைத் தேடித் தேடி
விழிக்குளம் படைக்க வேண்டாம் !
நாளைக்கே கிடைக்கக் கூடும் ;
நம்பிக்கை இழக்க லாமோ ?

**மின் :** ஆண்டுகள் தேய்ந்தும் உங்கள்
ஆறுதல் தேய வில்லை
மூண்டெழும் சோர்வு சற்றும்
முகத்திலே தோன்ற வில்லை !
ஈண்டுநான் வேலை யின்றி
இருப்பதை நினைக்கும் போது
தீண்டிடும் துயரத் தீயைத்
தெரிவிக்க சொற்க ளேது ?

**அன் :** அண்ணனின் துணையி ருக்க
அடங்காத துயர மென்ன ?
கண்ணினும் இனிய தங்கை
கலங்கினால் பொறுக்க மாட்டேன் !
உண்பதில் குறைவா ? இங்கே
உடுப்பதில் குறைவா ? துன்ப

எண்ணமே உனக்கு வேண்டாம்!
　　எதற்குநீ அஞ்சு கின்றாய்?

மின் : மனச்சான்றே இல்லை யென்றால்
　　மகிழ்ச்சியாய் இருப்பேன் அண்ணா!
தினக்கூலி வாங்கி வீட்டில்
　　செலவுகள் நடத்து கின்றீர்
கணக்கான வருவாய் பெற்றும்
　　கலக்கமே காட்ட மாட்டீர்!
வணக்கத்திற் குரிய அண்ணா
　　வறுமைதான் ஒழிவ தென்றோ?

அன் : கடமையின் வழியே என்றன்
　　கால்களை நடக்க வைத்தேன்
படித்தஎன் தம்பி, தங்கை
　　பணிசெய்யத் தொடங்கி விட்டால்
இடியுடன் புயலும் வந்த
　　இரவுகள் இனிமேல் மாறும்
விடிகின்ற நேரம்; கண்ணீர்
　　வெள்ளத்தை வளர்க்க வேண்டாம்!

மின் : அளவிலாச் சுமைகள் தாங்கி
　　அன்றாடம் நடக்கும் அண்ணா!
இளையவள் சற்றே உம்மை
　　இளைப்பாற வைக்க எண்ணி
வளைகின்றாள் வாடு கின்றாள்;
　　வழியொன்றும் தோன்ற வில்லை
களைப்புற்று நின்ற போதும்
　　கலங்காதே என்கின்றீரே!

இத்தரைப் பெண்களுள்ளே
　　என்னைப்போல் அண்ணன் பெற்றோர்
எத்தனைப் பேர்கள்? கோடி
　　எண்ணிக்கை கண்ட மாந்தர்
அத்தனை பேருள் என்றன்
　　அண்ணாவைப் போல அன்பை

நித்தமும் சொரிவார் உண்டோ?
நினைத்தாலே இனிக்கு தண்ணு!

தமக்கென வாழ்வார் இந்தத்
தரணியில் உலவக் கண்டும்
எமக்கென எல்லாம் தந்தே
என்றும்நீர் மகிழ்ச்சி கொண்டீர்!
உமக்கெனத் தனியே நீங்கள்
ஒன்றையும் ஏற்ற தில்லை!
நமக்கென வந்த துன்பம்
நாணிடச் செய்தீர் அண்ணு!

உலகமே நாங்கள் என்ற
உணர்ச்சியில் வாழ்ந்தீர்; எங்கள்
திலகமே நீங்கள் என்போம்!
திருவிளக் கேற்றும் வீட்டுத்
தலைவரே, மீண்டும் மீண்டும்
தங்கையாய்ப் பிறந்தே உங்கள்
மலரடி வணங்க வேண்டும்!
மற்றென்ன மகிழ்ச்சி வேண்டும்?



# காட்சி - 5

உறுப்பினர்கள் : **அன்பரசன், மின்னொளி.**
இடம் : **அன்பரசன் இல்லம்**

**அன்:** மின்னொளி, உன் முகமெங்கும் வாட்டமென்ன சொல்லம்மா?
என்றைக்கும் இல்லாத தளர்ந்தநிலை என்னம்மா?
எங்கெங்கே அலைந்தாயோ? இளமேனி களைத்தாயே!
பொங்குதுயர்ப் பெருக்கிடையே போய்விழ்ந்து புரள்வதென்ன?

**மின்:** வாட்டங்கள் இல்லையண்ணா; மகிழ்ச்சியுடன் வந்துள்ளேன்
கேட்டால் மகிழ்வீர்கள்; கேளுங்கள் சொல்கின்றேன்
மிதிவண்டி வாங்குதற்கு மிகவும் முயன்றீர்கள்
நிதிசேர்க்க முடியாமல் நிலைகுலைந்தீர் பலகாலம்
உள்ளத்தின் ஆழத்தில் ஒளிந்திருந்த கனவறிவேன்
கள்ளமிலா நம்தம்பி கருதியதும் நடக்கவில்லை
எப்படியும் வாங்கிடவே எண்ணமிட்டேன் நெடுநாளாய்!
இப்பொழுது வாங்கிவிட்டேன்; இதோபார்ப்பீர் அடையாளம்!
பணங்கொடுத்து வாங்கிவந்த சீட்டிதுவே பாரண்ணா!
கணத்தில்நீர் கடைநோக்கிச் சென்றிட்டால் பெற்றிடலாம்

**அன்:** மிதிவண்டி வாங்குதற்கு மிகுந்தபணம் ஏதம்மா?
புதிர்போட்டுக் குழப்புகின்றாய்? புரியாமல் தவிக்கின்றேன்!
சீட்டெங்கே காட்டிடுவாய்?

(மின்னொளி சீட்டெடுத்து நீட்டுகிறாள். அன்பரசன் பிரித்துப் பார்க்கிறான்)

சீட்டிதுவோ? என்னம்மா
சீட்டளித்தாய்? மிதிவண்டி சீட்டிதுவோ? நன்றாய்ப்பார்!

எப்போது நிகழ்ந்ததம்மா? செந்நீர்ஏன் எடுத்தார்கள்?
எப்படிநீ துணிந்தனையோ? ஏனம்மா இத்துயரம்?
இரத்தம் அளித்ததனால் நீபெற்ற பணத்திற்கு
மருத்துவ மனையளித்த சீட்டெடுத்து நீட்டிவிட்டாய்!

மின்: தவறுகத் தந்துவிட்டேன் சரியான சீட்டிதுவே!

அன்: குவிகின்ற துயர்மேகம் கொட்டிடுதே கண்மழையை!
ஒருதங்கை நீயென்றே உயிராக வளர்த்தனே
எரிகிறதே என்நெஞ்சம்! ஏனிந்த செயல்புரிந்தாய்?

மின்: பணிமனைக்குச் சென்றிடநீர் படுகின்ற துயரறிந்தேன்
தணியாத இத்துயரம் தணிப்பதற்குச் சிந்தித்தேன்
வேலையின்றிக் கிடப்பவள்நான்; வெறுங்கையால்
எதுநடக்கும்?
மாலையிலே ஒருத்திக்குப் பாடங்கள் சொல்லிவந்தேன்
ஓராண்டு சேர்த்ததிலே ஒருநூறு சேர்ந்ததண்ணா!
சேர்ப்பதற்கு மேலும்நான் திடமாக முயன்றுவந்தேன்
பலமுறைஎன் இரத்தத்தைப் பணத்திற்காய்
அளித்துவந்தேன்
சிலமாதம் கழிந்தபின்னே சேர்ந்தபணம் இருநூறு!
வாங்கிவிட்டேன் மிதிவண்டி; வாங்கியதில்
பிழையுண்டா?

அன்: தீங்கறியா உன்நெஞ்சால் செயலிழந்து நிற்கின்றேன்!
பல்லாண்டு நானுழைத்துப் படிக்கவைத்த
செயலெல்லாம்
சொல்லாமல் ஒருநாளில் தோற்றுவிடச்
செய்துவிட்டாய்!
கடல்போன்ற உன்அன்பில் கரையேற மாட்டாமல்
உடல்சிலிர்க்க நிற்கின்றேன்; ஒருவார்த்தை வரவில்லை!

# தன்னலம்

## காட்சி-1

உறுப்பினர்கள் : கனலோன், கோதை, கமலா,
இடம் : கமலாவின் இல்லம்

(பக்கத்து வீட்டில் இருக்கும் கனலோனும் கோதையும் சண்டை யிடுவதைக் கமலா கேட்டுக்கொண்டு இருக்கிருள்.)

கன : புகுந்தகம் பழித்துப் பிறந்தகம் நோக்கிப்
போனவள் ஏனடி வந்தாய்?
இகழ்ந்தஉன் முகத்தை இனியொரு கணமும்
என்விழி பார்க்கம றுக்கும்!

முறுக்கிய சிறுக்கி முகத்தினைத் தூக்கி
முன்னடி வைத்தது வெட்கம!
வெறுப்பினைச் சிந்தி வீதியில் இறங்கி
விரைவுடன் சென்றவள் நீயோ?

நானுனை அழைத்தும் நயம்பட உரைத்தும்
நடந்தவள் திரும்பிய தென்ன?
பூனையைப் போல புகுந்திட நினைத்தால்
போவெனக் கதவினை அடைப்பேன்!

கைவளை எங்கே? காதணி எங்கே?
காட்டடி காதகி இங்கே!
பொய்வலை எல்லாம் புழுதியில் சாய்ப்பேன்
போர்க்களம் கண்டிடு வாயே!

கோ: என்னுடன் பிறந்த என்னரும் தம்பி
ஏற்றநல் படிப்பினுக் களித்தேன்;
அன்னவன் பின்னால், அனைத்தையும் வாங்கி
அளித்திடல் உறுதியே ஆகும்!

கள: கஞ்சியும் ஏது? கந்தையும் ஏது?
கட்டிய வீட்டினில் என்றாய்;
நெஞ்சு புலம்பக் குந்தி யழுதவள்
நிகழ்த்தினை நாடகம் நன்றாய்!

ரோக்கமில் லாத பெற்றவர் வீட்டைக்
கோபுரம் ஏற்றிடும் கள்ளி
வக்கணைப் பேச்சும் வாயடி வீச்சும்
மண்ணிடை வீழ்ந்தது துள்ளி!

புகுந்தகம் வாங்கிப் பூட்டிய நகையைப்
போக்கிய தென்னடி நீதி?
மகிழ்ச்சியைக் காட்ட வந்தனை யோ ?உன்
மயக்கிடும் வித்தைகள் தோற்கும்!

மணி: கமலா...... கமலா...... கமலா......

(வேலைக்குப் போக நேரமாகி விட்டதென்று
அவசரமாக அழைக்கிறான்)

காலம் ஓடும்; காலம் ஓடும்;
கைகள் ஓட வில்லையே;
காலை எழுந்து கடைக்கு நடந்து
கறிகாய் வாங்கித் திரும்பினன்

இன்னும் சமையல் தொடங்க வில்லை
என்று முடிப்பாய் சொல்லடி?
நின்று முடிப்ப தற்குள் அங்கே
என்றன் வேலை கிழிந்திடும்!

கம: நொடியில் முடிப்பேன்; உணவும் படைப்பேன்;
விடையும் கொடுப்பேன் அன்பரே;

அடுத்த வீட்டுப் பேரில் நெஞ்சம்
  அடிமை யாகி நின்றது.

மணி: அண்டை வீடு சண்டை யிட்டால்
  ஆர்வ மென்ன காலையில்?
நொண்டிக் கதைகள் கேட்டு நின்றால்
  நோக்கம் குறையும் வேலையில்!

சோறு பொங்கிச் சாறு வைத்துத்
  துவையல் ஒன்று பண்ணுவாய்;
கூறு கெட்ட மூளி சண்டை
  கொடுப்ப தென்ன? எண்ணுவாய்!

நமது வாழ்க்கை; நமது வீடு;
  நமது தனித்த உலகமே;
நமது பிள்ளை, நமது சுற்றம்,
  நடத்தும் வாழ்க்கை போதுமே!

சுற்றி இருப்போர் மகிழ்ந்தால் என்ன?
  தொலைந்தால் என்ன? சொல்லடி?
முற்றும் கலக்க மின்றிச் சமையல்
  முன்னே முடிக்கச் செல்லடி.



## காட்சி - 2

உறுப்பினர்கள் : கமலா, எதிர்வீட்டுத் தோழி கோமளம்
இடம் : கமலாவின் இல்லம்

கம : வாடி கோமளம்! வருவது நின்றது;
மலர்முகம் காணேனே!

கோ : ஏடி, உன்மனம் தோழியை எண்ணிட
எப்படி இயன்றதுவோ?

கம : மாட மாளிகை ஆள்பவன் நானென
மயங்குதல் உண்டோடி?
தேடி யழைத்திட வில்லையென் றோர்குறை
சிந்தையில் கண்டாயோ?

கோ: குறைகள் கண்டிடும் வாழ்வினை எட்டிட
கோமகள் ஆகவில்லை!
உறையும் துயரினில் உறைபவள், நட்பெனும்
உணர்ச்சியில் மாறவில்லை!

கம: காலம் மாறிடும் கலங்குதல் நீங்கிடும்
கண்மழை போக்கிடுவாய்;
கோலம் விளைந்திட குறுநகை மலர்ந்திடும்
கோபுரம் ஏறிடுவாய்!

கோ: ஏறும் வாழ்வினுக் கேங்கிடும் மனநிலை
என்றுமே கொண்டதில்லை;
மீறும் வறுமையின் மிடுக்குகள் ஒழிந்திட
வேண்டுவன் ஒருவழியே;

புதிதாய் விருந்தினர் வந்தனர், செய்வது
புரிந்திடா மல்தவித்தேன்;
கதியாய் உன்னிடம் கருணையை வேண்டினன்
கைப்பொருள் வழங்கிடுவாய்!

# காட்சி - 3

உறுப்பினர்கள் : கமலா, மணியன்
இடம்: இல்லம்

கம: அன்புடைத் தலைவரே, யாரோ செய்தியை
நன்றென எண்ணியே நவிலத் தொடங்கினன்
என்னவோ என்றிதை ஏற்க மறுத்திடல்
துன்பியல் நாடகத் தொடக்க மாகிடும் !

மணி: என்னஉன் கிளிமொழி ? எதற்கிம் முகவுரை?
கன்னலை உன்மொழி கட்டும் முறையினில்
என்னையும் கட்டிட இதுவோ வழிமுறை ?
சொன்னதும் விளங்கிடும்; சொல்வாய்த் துணிவுடன் !

கம: எதிர்மனை வாழ்ந்திடும் ஏழைக் கோமளம்
கதியிலை என்றெனைக் கனிந்து வேண்டினள்
நதியெனக் கண்களை நங்கை காட்டினள்,
"உதவுக சிறுபணம் உடனே திருப்புவன் ;

விருந்தினர் வந்ததால் விளைந்த வேதனை
அருந்திட உணவுகள் ஆக்க வேண்டுமே
நெருங்கிய வறுமையை நேரில் அறிந்திடச்
சுருங்கிடும் எம்முகம் ; சோரும் மானமே !"

என்றெனைத் தொழுதனள் இளைய கோமளம்
இன்றொரு பத்தினை எடுத்து வழங்குக
பின்னொரு நாளினில் பெரிதும் மகிழ்வுடன்
சின்னவள் திருப்புவாள் ; செய்க நற்செயல் !

மணி: மழைமுகில் நானென மனத்தில் எண்ணமோ ?
அழுதனள் ; தொழுதனள் ; அளத்தல் போதுமே !
குழைவதால் இழைவதால் கொடுக்க ஒப்பிடேன்
பிழையென உணர்ந்திடு ; பேசா தகன்றிடு !

துயரினம் ஆயிரம் தோன்றும் பிறர்மனே
இயல்பென விடுப்பதே ஏற்றம் நல்கிடும்;
உயர்வெனும் எண்ணமும் உதவும் திண்மையும்
புயலெனச் சாய்த்திடப் புழுதி யாகுவோம்;

மற்றவர் துயரெலாம் மனத்தில் நீக்குக
உற்றநம் குடியினை உயர்த்த எண்ணுக
பற்றினைப் பிறரிடம் பதிய வைத்திடல்
முற்றிலும் செலவினில் மூழ்க வைக்குமே;



# காட்சி - 4

உறுப்பினர்கள் : **கமலா, அல்லி**
இடம் : **அல்லியின் இல்லம்**

**அல்:** கமலா, இங்கே வாராய்;
கலங்கும் செய்தி கேளாய்;
இமையைத் திறக்க வில்லை
என்றன் அருமைச் செல்வன்!

மேனி கொதிக்கு தையோ!
மிகவும் களைத்து விட்டான்
நானும் மருந்து தந்தேன்;
நடக்க வில்லை ஒன்றும்!

இரண்டு நாளாய்ப் பிள்ளை
இருக்கும் நிலையைப் பார்த்தால்
மருண்டு மருண்டு நெஞ்சம்
வாடி இளைத்தேன் தோழி!

**கம:** நெருப்பாய் உடம்பு கொதிக்க
நேர்ந்து விட்ட தென்ன?
அரும்புச் சிறுவன் சுரத்தில்
அல்லல் படுகின் றனே!

உடம்பு முழுதும் தழும்பின்
உருவம் தோன்றல் என்ன?
தடுக்க முடியா தினிமேல்;
தழும்பின் தோற்றம் அம்மை!

அம்மை கண்டான் செல்வன்
அதிக கவனம் வேண்டும்;
துன்பம் வந்த போது
சோர்ந்தி டாமல் இருப்பாய்!

திண்ண மாக செல்வன்
சிரித்து நிற்பான் நானே
கண்ணைக் காக்கும் இமையாய்க்
காத்து நிற்பாய் மகனே!

அல்: வீட்டில் துணையும் இல்லை
வெளியூர் சென்றார் கணவர்
காட்டில் விட்ட கதையாய்க்
கண்ணீர் பெருக்கி நின்றேன்!

கம: ஒன்றும் வாட வேண்டாம்
உதவி செய்வேன் நானே
திண்மை கொள்க தோழி
சீறும் நோயும் மாறும்!



# காட்சி - 5

உறுப்பினர்கள் : **கமலா, மணியன்**

இடம் : **இல்லம்**

**கம:** அடுத்த மனையின் அழகுச் சிறுவனிடம்
அம்மை வரக்கண்டேன் – நோயில்
படுத்துப் புரண்டிடும் பாலனின் தாயோ
பதறி விழக்கண்டேன் !

பெற்றவள் நெஞ்சம் பெரிதும் வருந்திடப்
பிள்ளை கலங்குகிறன் – தாய்
உற்றவர் யாரும் உதவிட வில்லையென்
றுள்ளம் குலைகின்ருள் !

பிள்ளையின் தந்தை வெளியூர் விரைந்தவர்
பின்னும் திரும்பவில்லை — நாமும்
அள்ளிய ணைத்த அருமைச் சிறுவன்
முறுவல் அரும்பவில்லை !

**மணி:** மாற்ருர் அழுவதில் உன்மனம் நொந்தால்
மருந்துகள் தேடிடவோ? — எவரும்
ஆற்ற முடியா அவலம் இதுவன்ரே?
யாரிடம் ஓடிடவோ?

தோழிகள் நெஞ்சம் துடித்ததென் ருலோ
துவண்டு விழுகின்ருய்; — ஊரில்
ஏழைகள் என்ருல் எடுத்து வழங்கிட
என்னைத் தொழுகின்ருய்

போதுமே நான்படும் பாடு: விடிந்த
பொழுதே பரிந்துரையோ? — நமக்குச்
சோதனை வேண்டாம் தொலைப்பாய் கனிவுளம்;
சொன்ருல் புரிந்தனையோ?

கம! இமய மலையினில் ஏறி இறங்கவோ
இப்போ துரைக்கின்றேன்? — அங்கே
இமைகள் திறக்க இயலாக் குழந்தை
இதயம் பறிக்கின்ருன்!

தடுத்திடும் ஊசி மருந்துகள் ஏற்றல்
தடுப்பு முறையாகும்! — நீங்கள்
படித்தவ ரன்ரே? பரிவாய் முயலுதல்
பண்பு நெறியாகும்!

சுற்றி இருப்போர் மனைகளில் அம்மை
தொடாமல் இருந்துவிடும் — இந்த
நற்செயல் ஒன்றை நடத்திடும் வாய்ப்பால்
நலங்கள் திருந்திவரும்!

மணி: பித்தமோ கொண்டாய்? பிதற்றுகின் ருயே!
பிணங்கிநிற் காதேபோ! — இன்னும்
எத்தனை வேலை எனக்குவைப் பாயோ?
எதிரேநிற் காதேபோ!



# காட்சி - 6

**உறுப்பினர்கள் : கமலா, மணியன்.**
**இடம் : இல்லம்**

**கம:** நேற்றுநான் சொன்னேன்; நீங்கள்
நெருஞ்சிமுள் என்றீர் ; இன்றோ
ஆற்றொணாப் புயலைப் பார்க்கும்
அவலத்தில் நிறுத்தி விட்டீர் ;
சீற்றமே கொண்டீர் ; உங்கள்
செவிகளை மூடி வைத்தீர் ;
ஏற்கவே மறுத்தீர் ; செல்வன்
எழில்மேனி எங்கும் அம்மை !

**மணி:** ஒருமகன் என்றே நானும்
உயர்வாக வளர்த்தேன் ; அந்தத்
திருமகன் தானோ அம்மைச்
சீற்றத்தால் வாடு கின்றான் ?
வருதுயர் அறியா மூடன்
வன்மொழி பேசி விட்டேன்
நெருப்பினைத் தொட்ட பின்தான்
நீதியை உணர லானேன் !

**கம:** இடிவந்து வீழு முன்னே
எச்சரித் தேனே ; இன்று
வெடிவந்து தகர்த்த பின்னே
வெம்பினால் ஆவ தென்ன ?
மடிவந்து குதிக்கும் பிள்ளை
வாட்டத்தை என்ன சொல்வேன் ?
கொடிவந்து குப்பை மேட்டில்
குலைந்திடச் செய்து விட்டோம் !

**மணி:** இப்போதே போவேன் ; பக்கம்
இருப்பவர் எவர்க்கும் அம்மை
எப்போதும் வாரா வண்ணம்
ஏற்றநல் மருந்த ளிப்போர்
தப்பாமல் வரவே செய்வேன் ;
தடுத்திடும் முறைக ளெல்லாம்
இப்போதே நடக்கச் செய்ய
எழுந்துநான் நின்று விட்டேன் !

# காட்சி - 7

**உறுப்பினர்கள் : மணியன், சுகாதார அதிகாரி**
**இடம் : அலுவலகம்**

**மணி:** தடுப்புமுறை மருந்தளிக்கும் சான்றோரே
வணங்குகிறேன்
படிப்பறிந்தும் பண்பறியாப் பாதகன்நான்; மன்னிப்பீர்!
அயல்மனையில் இளஞ்சிறுவன் அம்மையினுல்
துயருற்ருன்
துயர்நீக்கும் தடுப்புமுறை சூழ்ந்தவர்க்கும்
வேண்டுமென
என்மனைவி உரைத்ததையும் எடுத்தெறிந்து
பேசிவிட்டேன்!
இன்றேஎன் மகனுக்கே அம்மைநோய்
வரக்கண்டேன்!
நேற்றேநான் உங்களிடம் தெரிவிக்க வந்திருந்தால்
ஆற்ருத இந்நிலையை அணைபோட்டுத் தடுத்திருப்பேன்

**சுகாதார அதிகாரி**

உங்கள்மகன் துயரென்ருல் ஓடோடி வருகின்றீர்
அங்கொருவர் அயல்மனையில் அல்லலுறும் போதினிலே
கோளாத செவியினராய்க் கீழ்நோக்கி இருந்திரோ?
மாற்ருனும் உன்னைப்போல் மனிதன்தான்
என்றுணர்த்த
நேற்றுவரை வந்தவரின் நீள்வரிசை அறிவீரோ?
உணர்வற்ற நெஞ்சினரே, ஒருகாந்தி போதாதோ?
மணமற்ற காகிதப்பூ வாழ்வின்னும் மாருதோ?
கல்லடிகள் பட்டநபி கருத்துரைகள் கேட்டபின்னும்
நல்வழிகள் உணர்ந்தீரோ? நாணத்தைத் துறந்தீரே!
சொல்லரிய ஏசுபிரான்; தூயவராம் புத்தபிரான்;
நல்லவர்கள் வந்துவந்து நம்மிடையே வாழ்ந்தென்ன?
பழஞ்சோற்றுப் பானைகளாய்ப் பழையபடி இருப்பதன்றி
எழிலான நல்றலத்தை எப்போது காண்பதுவோ?

தன்னலச் சேற்றுக்குள் தாழ்ந்தழுந்திக் கிடப்பதெனில்
இன்னுமொரு நூற்ருண்டை இருட்டுக்குள்
கழிப்பீர்கள் !

மணி: சொந்தநலம் பெரிதென்று சோற்றுக்கே
வாழ்ந்துவிட்டேன்
சிந்தையிலே மாற்ருரைச் சிந்தித்த நாளில்லை !
இனியேனும் அயலிடத்தில் இயன்றவரை குறைபோக்க
நினைவாகச் செயல்படுவேன் ; நெஞ்சார நம்புங்கள் !
இருபத்து நான்குமணி இருக்கின்ற நாளினிலே
ஒருபத்து நிமிடங்கள் ஒதுக்கிடவே எண்ணிவிட்டேன் !
பாவியிடம் பேசாமல் பரிவோடு வாருங்கள்
தாவியெழும் நல்லுணர்வால் சாற்றுகின்றேன்
பெரியோரே !



# பழிச்சொல்

## காட்சி - 1

உறுப்பினர்கள் : **வாழைத்தோட்ட உரிமையாளன் வேம்பு, அருளன், கூலிகள்.**

இடம் : **வாழைத் தோட்டம்**

**வேம்:** செவ்வாழைத் தோட்டத்தில் திருடர்களின் காலடிகள்;
எவ்வாறு வந்ததென எண்ணியெண்ணிப்
பார்க்கின்றேன்!
உளமாரப் பணியாற்றும் உழைப்பாளர் இங்கிருக்க
களவாடும் கயவனவன் கால்வைத்த தெப்படியோ?

**கூலி:** யாமொன்றும் அறியோமே; யார்செய்த
கொடியவினை?

**வேம்:** ஊமைகளாய் இருப்பதனால் உண்மைகளும்
மறைந்திடுமோ?
வளமான குலைதொங்கும் வகையெல்லாம் மற்றவர்க்கே
உளவாக உரைத்தவர்கள் நமக்குள்ளே ஒருவரன்றோ?

**கூலி:** படியளக்கும் பெருமானே! குடிவளர்க்கும் கோமானே!
அடிதொழுது வாழ்பவர்யாம்; ஐயங்கள் கொள்ளாதீர்!
பொன்னுக்கே என்றாலும் பொய்சொல்லும்
பிழைப்பறியோம்!
கண்ணுக்குத் தீங்கியற்றும் கண்ணிமைகள்
கண்டதுண்டோ?

வீட்டு விளக்கேற்றும் வேந்தர் நிழலடியில்
காட்டு விலங்கென்ற கறைபட்டால் உயிர்வாழோம் !
எல்லோரும் சென்றபின்னும் இங்கிருந்தான் நம்அருளன்
கள்ளர்கள் வருகையினைக் கண்டாலும் கண்டிருப்பான் !

( அருளப்பன் வருகின்றான் )

**வேம்:** அமைதியுடன் வருகின்ற அருளப்பா, நேற்றிங்கே
நமையழிக்கும் திருடர்களின் நடமாட்டம் அறிந்தாயோ?

**அரு:** இருள்பரவும் வரையிங்கே என்பணியைச்
செய்திருந்தேன்
ஒருவரையும் காணவில்லை, திருடர்கள் வந்தனரோ ?

**வேம்:** என்னையா கேட்கின்றாய் ? என்ன துணிவுனக்கு?
நன்றியுடன் நடந்திடுவாய் எனநம்பி இருந்தேனே ;
பலநாட்கள் பலர்உன்மேல் பழிசொல்லி வந்தார்கள்
சிலவேளை ஐயங்கள் சிந்தையிலே வந்தாலும்
நம்பிக்கை கொண்டிருந்தேன் ; நன்றாக இன்றறிந்தேன்
உன்னைப்போல் எத்தர்கள் உலகத்தில் இல்லையடா !

**அரு:** சிந்தித்துப் பார்த்தீரா ? தெளிவான என்முகத்தில்
நிந்திக்கும் சிறுமைகளின் நிழல்கூடத் தோன்றாதே !
வஞ்சப் படுகுழியை வண்ணப்பூப் படுக்கைகளாய்
நஞ்சு நினைவுகளை நல்லெண்ணத் தூதுவராய்
பல்லை இளித்தபடி மெல்ல மயக்குகிற
கள்ளர்களின் சந்தையிலே காணாத மனிதன்நான் !

**வேம்:** இதுவரையில் அவ்வாறே எண்ணிவந்தேன் ;
அதனால்தான்
மதிமயக்கிக் களவாடும் மனத்துணிவு பெற்றுவிட்டாய் !

**அரு:** களவாடும் இழிசெயலைக் கருத்தாலும் நினைத்தறியேன்
அளவாகப் பேசுங்கள் ; அறவழியில் நடப்பவன்நான் !

**வேம்:** பொருளெல்லாம் தொலைத்துவிட்டாய் ; போக்கிடமே
உனக்கில்லை,

புரள்கின்ருய் புழுதியிலே ; பொருள்சேர்க்க
வஞ்சனையாய்க்
களவாடி மறைத்துவிட்டுக் கதைவிரித்தா நிற்கின்ருய் ?-

**அரு:** இளைப்பாக இருப்பதனுல் ஏதேதோ பேசாதீர் ;
வாணிகத்தில் பெரும்பொருளை வாரி இறைத்துவிட்டேன்
காணுத பேரிழப்பைக் கண்டுவிட நேர்ந்தமையால்
செல்வ நிலைமாறித் தேய்ந்து கிடப்பதன்றி
நல்ல மனமின்னும் நலியாமல் வைத்துள்ளேன் ;
வேறெவரோ செய்தபிழை என்மீது வரக்கண்டேன் ;
யாரென்றே அறிவதற்கு முயற்சியினைத் துவங்கிடுவீர் ;
கூலிக்கு வந்ததனுல் கூரம்பு பாய்ச்சாதீர்
வாளுக்கு என்தலையை வழங்கிடவும் நான்அஞ்சேன் ;
பிள்ளை மனையாளைப் பெற்றெடுத்த தாயாரைக்
கொள்ளியிட நேர்ந்தாலும் கொள்ளையிட
மாட்டேன்நான் !
வீணுக என்மீது வெம்பழியைச் சுமத்தாதீர் !

**வேம்:** நாணுமல் நீயாடும் நாடகத்தை நம்பிடவோ ?
பேசாமல் வெளியேறு ; பெருங்கோபம் மூண்டுவிடும் !



## காட்சி - 2

உறுப்பினர்கள் : அருளன், இருளன்
இடம் : வட்டிக்கடை

அரு: அண்டி வந்தேன் அடைக்கலமாய்
அன்பாய் உதவி வழங்கிடுக !
கண்கள் கனிவு காட்டிவிட்டால்
காலம் முற்றும் போற்றிடுவேன் !

இரு! என்ன வேண்டும் அருளப்பா ?
எதனை நாடி வந்தாயோ ?
சொன்னால் உதவி செய்கின்றேன்
சோர்வைத் தூக்கி எறிந்துவிடு !

அரு: வேலை இழந்து நிற்கின்றேன்
வெறுங்கை எங்கே சோறளிக்கும் ?
மேலும் குடும்பம் நலியாமல்
மேன்மை அடைய வேண்டுமையா !

இரு: கொடைகள் வழங்கும் அளவிற்குக்
கோடிப் பொருள்கள் எனக்கில்லை

அரு: கொடையாய் எதையும் நான்விரும்பேன்
கொண்டு வந்தேன் வைரநகை!

இரு: அதிக வட்டி நான்கேட்பேன்
அதற்கும் நெஞ்சம் இசைவாயோ ?

அரு: இதயம் இருக்கும் எனவந்தேன்
இயன்ற வட்டி தருகின்றேன் !

இரு: எங்கே உன்றன் வைரநகை ?
எடுத்து வைப்பாய் கண்முன்னே !

அரு: மங்கா ஒளியை வீசுகின்ற
மதிப்பில் உயர்ந்த வைரமிது !

இரு: நன்ருய் உணர்ந்தே சொன்னுயோ?
நானும் வைரம் பார்த்துள்ளேன்
உன்றன் வைரம் உயர்ந்ததென
உறுதி எனக்குத் தோன்றவில்லை

வழக்க மாக என்னிடத்தில்
வந்து செல்லும் வைரம்தான்!
பழக்க மாக நானளிக்கும்
பணத்தை வாங்கிச் சென்றிடுவாய்.

அரு: முன்னேர் காலம் முதற்கொண்டு
முற்றும் பேணிக் காத்தநகை!
இன்று வறுமை மிகுந்ததனுல்
எடுத்தே அடகு வைக்கின்றேன்!

பழைய வைரம் பாருங்கள்
பத்து நூறு தாருங்கள்
அழகு பாய்ச்சும் ஒளிகண்டும்
அச்சம் என்ன நெஞ்சத்தில்?

இரு: எழுந்து நிற்கும் அச்சமெல்லாம்
எனக்கா? உனக்கா? எண்ணிப்பார்!
விழுங்கி ஏப்பம் விடுவதற்கோ
மதிப்பை உயர்த்தி மழுப்புகிருய்?

பொய்கள் புனைந்து காட்டுவதால்
புவியில் உயர முடியாது!
மெய்மை உனக்கு நெடுந்தூரம்
மீண்டும் இங்கே வரவேண்டாம்!



# காட்சி - 3

உறுப்பினர்கள் : பொன்னி, நீலவண்ணன்.
இடம் : பாதையோரம்

(பொன்னி நடந்து செல்கிருள், பின்ஞல் இருந்து நீலவண்ணன் அழைக்கிருன்)

நீல: பொன்னி ...... பொன்னி......
பொன்னிநதி போவதுபோல் போகின் ருயே
பூமேனி வாடாதோ ?

பொ: ... ... நீங்கள் ... ... நீங்கள்

நீல; என்ஜைநீ யாரென்றே கேட்கின் ருயோ ?
என்னேடு பள்ளியிலே படித்த நாட்கள்
உன்நெஞ்சம் மறந்தனவோ ?

பொ: ... ... ... நீல வண்ணன் !

நீல: உரைத்தாயே என்பெயரை ! நன்றி ! நன்றி !
உன்ஜைநான் இன்றுவரை மறக்க வில்ஜை;
எப்படியோ என்பெயரை நிஜைவு கொண்டாய் !

பொ: ஆண்டுகளும் ஓடினவே; இடையில் பார்க்க
அமையவில்ஜை நல்வாய்ப்பே ! அதஞெ லன்ருே
தோன்ருமல் திகைப்புற்றேன் ; வகுப்பில் நீங்கள்
துடுக்காக இருந்ததெலாம் மறப்ப வர்யார் ?

நீல: வேண்டாமல் இருந்தாலும் பள்ளி நாட்கள்
விரும்பிவந்து நம்நிஜைவில் சுழன்று நிற்கும்
நீண்டுவிட்ட இடைவெளிக்குப் பிறகும் உன்றன்
நிஜைவஜைகள் என்நெஞ்சில் ஆர்ப்ப ரிக்கும் !

பொ: குடும்பநிஜை தாழ்ந்ததஞல் பள்ளிக் கல்வி
குறைவுபடப் பாதியிலே நின்று விட்டேன்

கடுமைமிகு வறுமைவர நேர்ந்து விட்டால்
கல்விநகை அணிவதற்கும் வழியே இல்லை !

நீல: தடுக்கின்ற மலைபோல வறுமை, வாழ்வைத்
தாக்குவதால் துன்பங்கள் அளவே இல்லை !
தொடுக்கின்ற புதுமாலை போலக் காலம்
துணைநின்று வளவாழ்வு தோன்றச் செய்யும் !

பொ: என்றேனும் எமக்கொருநாள் வாய்க்கும் என்றே
எண்ணிதினம் எதிர்பார்த்துக் காத்தி ருப்பேன்;
குன்றுமல் எம்தந்தை முயற்சி செய்வார்
குடும்பநிலை உயராமல் வாடு கின்றார்
அன்றாட வாழ்வுக்கே ஏங்கு கின்ற
அவலநிலை முடிவுற்றால் மகிழ்ச்சி யாகும் ;

நீல: நன்றாக செழிக்கின்ற வாழ்க்கை காண்பாய்
நல்லமனம் கொண்டவள் நீ ; வாழ்த்து கின்றேன்!



# காட்சி - 4

உறுப்பினர்கள் : **செருக்கன், சழக்கன், அருளன்.**
இடம் : **பாதையோரம்**

**செரு:** வாடிக் கிடப்போன் வறுமை அகற்றிட
வாய்ப்பினைத் தேடுகிறான்! — மகள்
கூடிச் சிரித்திடக் கொஞ்சி மகிழ்ந்திடக்
கூத்துகள் ஆடுகிறாள்!

சழ: யாரிந்த சிட்டுக்கள்? யாரிவர் பெற்றவர்?
ஆவல் எழுப்புகிறாய்! — ஊரினில்

**செரு:** சீருடன் வாழ்ந்திடும் செல்வரின் பிள்ளையை
சிந்தை மயக்குகிறாள்!

மாடு மனைகள் மறைந்ததன் பின்னும்
வளங்களை நாடுகிறான்! — செல்வம்
தேடும் வழியெனச் சின்னக் குமரியைச்
சேற்றினில் மூடுகிறான்!

நிதியை இழந்தவன் நெஞ்சில் ஒழுக்க
நெறியைக் கலைத்துவிட்டான்! — அருளன்
மதியை இழந்திட நேர்ந்த வறுமையில்
மானம் தொலைத்துவிட்டான்!

சழ: உத்தம னாக நடப்பவன் என்பானே
உண்மையும் இப்படியோ? — இவன்
நித்தமும் ஊரில் நிமிர்ந்தே உலவிட
நேர்வதும் எப்படியோ? —

(இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டே அருளன் வருகிறான். செருக்கனும் சழக்கனும் நகைக்கின்றனர்)

அரு: இழிவாய் மொழியும் இழிந்த மனிதர்
இளிப்பதும் என்னேடா? — என்னைப்

பழிமேல் கிடத்திப் பலவாய் இகழ்ந்திடும்
பாதகர் மண்ணோடா!

உண்மை அறியா உரைகளுக் குள்ளே
உலகம் அடங்கிடுமோ? — இரு
கண்ணை மறைக்கும் கயவர் கரத்தினில்
காலம் ஒடுங்கிடுமோ?

செரு: குற்றம் புரிந்தவன் கொக்கரிப் பால்பழிக்
கூட்டம் மறைவதுண்டோ? —

மானம்

சழ: விற்றுப் பிழைப்பவன் வெற்றுக் கதைகளில்
வீரம் உறைவதுண்டோ?

(நகைக்கின்றனர்)



# காட்சி - 5

உறுப்பினர்கள் : பொன்னி
இடம் : இல்லம்

(காலையில் எழுந்த பொன்னி, தந்தையின் படுக்கையைப் பார்க்கிருள். கடிதம் மட்டும் இருந்தது. தந்தையைக் காண வில்லை)

பொ: தந்தையார் படுக்கை இங்கே
தனிமையாய் இருப்ப தென்ன?
முந்திய இரவு பார்த்தேன்
முகமெலாம் வாட்டத் தோடு
சிந்தனை தேக்கி வந்தார்;
சிறியவள் கேட்ட போதும்
தந்ததோர் விடையும் இல்லை!
தனியேஓர் கடிதம் என்ன?

(கடிதத்தைப் படிக்கிருள். தந்தையின் குரல் ஒலிக்கிறது.)

அருளன் குரல்

நேரிலே சொல்வ தற்கு
நெஞ்சிலே துணிவே இல்லை;
ஊரிலே கேட்ட சொற்கள்
உயிரையே பறிக்கக் கண்டேன்!
வேரிலே நெருப்பு வைத்தால்
விண்முட்டும் மரமும் வீழும்!
பாரிலே பழிச்சொல் கேட்டும்
பாவிநான் வாழ்வ துண்டோ?

கடைவீதி சென்ற போது
கண்டானே நீல வண்ணன்!
நடைபாதை மக்கள் உங்கள்
நட்பினைப் புரிந்தி டாமல்

தடுமாற்றம் அடைய லானுர்
    சரமாரி தூற்ற லானுர்!
கொடுவாளால் சாய்த்தி ருந்தால்
    கும்பிட்டே ஏற்றி ருப்பேன்!

மானமே இழந்த பின்னுல்
    வாழ்க்கையை விரும்பு வார்யார்?
ஈனமே சுமந்து பாரில்
    இருப்பவன் மனிதன்தானே?
வானமே வரினும் என்றன்
    மரணத்தை நிறுத்த மாட்டேன்!
ஆனதால் என்னைத் தேடும்
    அழுகையை நிறுத்திக் கொள்வாய்!

பொ: ஐயகோ! அப்பா! இங்கோர்
    ஆறுதல் சொல்வார் உண்டோ?
வையகம் தூற்று கின்ற
    மாபழி வாங்கித் தந்தேன்!
புயலெனத் தோன்றி அச்சம்
    புகுத்திடும் கடிதம் இன்று
பொய்யென மாறி எல்லாம்
    பொய்க்கனு ஆகி டாதோ?



# காட்சி - 6

உறுப்பினர்கள் : **நீலவண்ணன், பொன்னி**
இடம்: **நீலவண்ணன் இல்லம்.**

**நீல:** கார்குழல் கலையக் கண்ணீர் பெருக்கிச்
சீரெலாம் குலையத் தேம்புவ தென்ன?

**பொ:** எப்படிச் சொல்லி என்துயர் விளக்குவேன்?
ஒப்பிலாத் தந்தை உறவைப் பிரிந்தேன்
ஊரெலாம் பழிக்கும் ஒருபெருங் கொடுமை
நேர்ந்ததே எனக்கு! நெஞ்செலாம் கொதிக்கும்!
பொல்லா மாந்தர் புனைந்த பொய்களால்
எல்லா நலனும் இழந்து நின்றேன்!
நேற்று வீதியில் நெருங்கிப் பேசிய
காட்சியைக் கண்டோர் களங்கம் கூறினர்!
என்னையும் உம்மையும் இணைத்து வைத்துத்
துன்ப மூட்டும் சுடுசொல் ஆயிரம்
தந்தையின் செவிபடத் தருக்கர்கள் பேசினர்!
நிந்தைகள் கேட்டு நெஞ்சம் துடித்தார்
பழிச்சொல் சுமந்து பாரில் வாழ்ந்திடும்
இழிவைத் துடைத்திட இன்னுயிர் துறப்பதாய்
எழுதி வைத்தே ஏகினர் எங்கோ!

**நீல:** பழிச்சொல் கேட்டுப் பதறு கின்றேன்!
பழைய நினைவில் பார்த்துப் பேசினோம்
பிழையாய் எண்ணியே பேதைகள் பழித்தால்
அதற்கென நாம்ஏன் அஞ்சிட வேண்டும்?
இதற்கோ தந்தை இடிந்து போனர்?
ஊரார் அறிய உறவினர் புரிய
சீரார் திருமணம் செய்வேன் உன்னை!
உறுதியாய் உரைக்கும் என்மொழி தவறேன்
பொறுமையாய் இருப்பாய்! புலம்புதல் தவிர்ப்பாய்!
தந்தையைத் தேடும் முயற்சிகள் செய்வேன்

பொ: எந்தையைக் கண்கள் என்று காணுமோ?

(வீதியில் சிலர் ஓடி வருகின்றனர்.
பொன்னியைப் பார்த்ததும்)

அம்மா, உன்றன் ஆருயிர் தந்தை
எப்படித் துணிந்தார் இச்செயல் புரிய?
வல்லிருள் விலகும் வைகறைப் பொழுதில்
மெல்ல வந்தவர் ஏரியில் குதித்தார்!
இன்னுயிர் மாய்த்திடும் முயற்சியே இதுவென
எண்ணிய நாங்கள் பாய்ந்து குதித்தோம்;
நீந்தி இழுத்துக் கரையில் சேர்த்தோம்!
மயக்கம் தெளிந்திட மருத்துவ மனையில்
சேர்த்து விட்டுத் திரும்பு கின்றோம்!

பொ: (அழுகிருள்) அப்பா... அப்பா...

நீல: ... ... ... ... அழாதே பொன்னி!
இப்பொழு தேநாம் சென்று பார்ப்போம்!
கலங்கிடும் கண்ணீர் துடைப்பாய் கண்ணே!



## காட்சி - 7

**உறுப்பினர்கள் : பொன்னி, நீலவண்ணன், அருளன்.**
**இடம் : மருத்துவ மனை**

பொ: அப்பா...... அப்பா...... அன்புமகள் வந்துவிட்டேன் எனைமறந்தே
இப்படியும் செயல்புரிய ஏனப்பா துணிந்துவிட்டீர்?
ஒருமகள் நான் இருக்கின்றேன் ; உலகத்தில் என்விழியில்
பெருகிவரும் கண்ணீரைப் பரிவோடு துடைப்பார்யார்?

அரு: வந்தாயா மகளே, என் வாட்டத்தை உணர்ந்தாயோ?
நொந்தமனம் உணர்ச்சியிலே திசையறியா தோடியது ;
எத்தனைதான் நான்சுமப்பேன்? எண்ணற்ற பழிச்சொற்கள் !
அத்தனையும் போதாமல் அருமைமகள் பழிவேறு ;
தோட்டத்தில் உண்மையுடன் சோர்வின்றி உழைத்திருந்தேன்
காட்டுமனம் படைத்தவர்கள் கள்வனென்றே பழித்தார்கள்
மதிப்புமிக்க வைரத்தின் மதிப்பறிய மாட்டாமல்
கொதிப்புற்றுப் பொய்யனெனக் குறைசொல்லி இழித்தார்கள்
நேர்மையினை அறியாமல் நெஞ்சாரப் பழித்தவர்கள்
கூர்மிகுந்த நாக்கிற்குக் குமுறலுடன் பொறுத்திருந்தேன்
பெண்மீது பேசியதோர் பெரும்பழியை ஆற்றுமல்
விண்முற்றும் தலைமீது வீழ்ந்ததுபோல் ஆகிவிட்டேன்!
சாவொன்று வந்தால்தான் சரியாக உணர்வார்கள்
வாழ்கின்ற மாந்தர்முன் மானத்தை நிலைநிறுத்த
தற்கொலையே வழியென்று சாவதற்குத் துணிந்துவிட்டேன்.

நில: பெற்றமகள் அருகிருக்கப் பிரிந்திடவும் துணிந்தீரே
உற்றவர்கள் நீங்களன்றி அவளுக்கோர் உறவேது?
மனச்சான்றே இல்லாத மனிதர்களின் மொழிகேட்டு
நினைவிழந்து நெடுந்தூரம் சென்றிடுதல் முறைதானே?
மறுமுறைநீர் மறந்தேனும் தற்கொலையை எண்ணுதீர்
வறுமையிலும் செம்மையுடன் வாழ்க்கையினை
நடத்திவந்தீர்
தவருக இவ்வையம் தாங்கரிய பழிச்சுமையைக்
குவித்தாலும் மனத்தளவில் குன்ருத நிறைவுடையீர்;
ஆகையினுல் யாருக்கும் அஞ்சாமல் வாழ்ந்திடுக;
தோகைமயில் என்நட்பால் சுடுசொற்கள் ஏற்காமல்
நானவளை மணப்பதற்கு நல்லுறுதி வழங்கிவிட்டேன்.

அரு: வானத்தில் பறப்பதுபோல் மகிழ்கின்ற பேறடைந்தேன்
இனியென்றும் என்வாழ்வில் தற்கொலைக்கே இடமில்லை!
பித்துமனம் படைத்தவர்கள் பேசுகின்ற பழிச்சொல்லை
நித்தமெனை ஆளுகின்ற சத்தியமே எதிர்த்துநிற்கும்!



# பொங்கல் கரும்பு

## காட்சி - 1

உறுப்பினர்கள் : **பணத்தடியார், அவர் மனைவி கன்னி**
இடம் : **பணத்தடியார் இல்லம்.**

**பண:** தங்க மாளிகை தழுவிய மனிதன்,
திங்கள் வானையும் சிறையினில் பூட்டி
உரிமைகள் பேசிட உள்ளம் துடித்தவன் ;
அழகிய முத்தெலாம் அடைவதற் காகவே
முழங்கும் கடலை முற்றிலும் குடித்திட
வெறிகொண் டெழுந்த விந்தைப் பிறவி ;
நிறைநிதி படைத்தோர் நெருங்கிச் சூழ்ந்திட
வாவென அழைக்கும் வைர மணிகளால்
காவியம் வியக்கும் கற்பனை அமைந்த
வாசல் சமைத்து வரவு பார்த்தவன்;
திருமகள் செயலால் தேம்புகின் றேனே !
ஒருமகள் என்றே உவப்புடன் வளர்த்தேன்
செல்வக் குடும்பச் செழிப்பெலாம் மறந்தாள்
எல்லாப் பெருமையும் இழந்திடச் செய்தாள் !

**கன்:** மண்ணிலே நம்குலம் வளர்ப்பவ ளன்றோ ?
வெண்ணிலா நெஞ்சம் விரும்பிய படியே
காளை ஒருவனைக் கைப்பிடித் தளித்தீர் !
மாலை சூடும் மணவிழா முடிந்தபின்
உள்ளம் வருந்தி உரைப்பதும் முறையோ ?

பண: பள்ளத்தில் விழுந்தபின் பதறுவ தல்லால்
களிப்பதற் கில்லை; கலக்கமே பரிசாய்
அளித்தனள் செல்வி; யாரிதை மறப்பார்?
இணையிலாச் செல்வர் இல்லம் செல்வாள்
அணையிலா மகிழ்ச்சி அடைந்திடும் என்றே
எண்ணி யிருந்தேன்; எல்லாம் பொய்த்தன!
மரகதக் கோட்டைகள் மணலின் கோட்டையாய்
அரண்மனைக் கனவுகள் ஆண்டியின் கதைகளாய்
வெடிகளே இன்றி விம்மல் ஒலிகளால்
நொடியிலே தகர்த்து நொறுக்கிவிட் டாளே!

கன்: ஏழை ஒருவனை ஏற்று மணந்தாள்
வாழும் வழியினை வஞ்சி அறியாள்
எத்தனை தடுத்தும் ஏற்கவே இல்லை!

பண: சித்தமே அவனிடம் சென்ற தென்று
முடிந்த முடிவாய் மொழிந்திட் டாளே!
இடிந்த என்மனம் எப்படித் தேறும்?

கன்: நங்கையின் திருமணம் நடத்தி வைத்தீர்
பொங்கிடும் துயரால் புலம்புதல் வீணே!
நம்மகள் மகிழ்ச்சியே நமது மகிழ்ச்சி!
புன்னகை தவழப் புதுமனை சென்றிட
அன்புடன் மகளை அனுப்புதல் கடனே!

பண: பெருநிதி படைத்த பெருங்குடி எமதே!
அருந்தனம் யாவும் அடைவதற் காகவே
மெய்யாய்ப் பன் நம் மகளை மணந்தான்
ஐயமே இல்லை; அறிவேன் நன்றாய்!
ஆதலால் நானோர் ஆணை செய்வேன்
நீதியே என்று நீயும் உரைப்பாய்!

கன்: ஆணையா? அதனை யாதென மொழிவீர்!
பேணிய பெண்மனம் பெரிதும் மகிழுமோ?

பண: துரும்பே ஆயினும் விருப்பமோ டென்றும்
மருகனுக் குரிமை வழங்கிட மாட்டேன்!
தினைத்துணை செல்வமும் தீண்டிட ஒப்பேன்!
அனைத்தும் கல்வி அறத்தினுக் களிப்பேன்!

கன்: இதுவோ அறச்செயல்? எண்ணுக அன்பரே!
மதியோ? அன்றி வஞ்சமோ? அறியேன்!
சீரெலாம் படைத்த செல்வருக் கழகோ?
ஊரெலாம் சிரிக்கும்! உறவெலாம் தூற்றும்!
முடிவினை மாற்றுக! முடிவினை மாற்றுக!
அடியினைப் பணிந்தே அன்புடன் வேண்டினேன்

பண: மாற்றவோ வேண்டினை? மாற்றுவேன்! மாற்றுவேன்!
ஏற்றம் அளிக்க இயலா மேடுகள்
கல்லும் முள்ளும் கலந்த காடுகள்
நெல்மணி விளையா நெருஞ்சி புதர்கள்
எருக்கு மலர்கள் எங்கும் பூத்தே
இருக்கும் நிலங்கள் இவர்கள் ஆள்கவே!



# காட்சி - 2

உறுப்பினர்கள் : **வெண்ணிலா, மெய்யப்பன்**
இடம் : **இல்லத்தின் தனியறை.**

வெ: ஆள்வதற்கே என்னை நான் அளித்துவிட்டேன்
மன்னவரே
தாள்பிடித்து வாழ்வதிலே தணியாத ஆவலுற்றேன் !
தூயமலர்ப் பூங்காவாய்த் தொடங்காதோ
நம்வாழ்க்கை ?
பாயுமின்ப அருவியிலே பலகதைகள் கேளோமோ ?
தொட்டென்னை மணந்தவரே ; சுவைமிகுந்த
இல்லறமாய்க்
கட்டிவைத்த அமுதத்தைக் கலந்துண்டு மகிழ்வோமா ?

மெ: மணமுடித்த காதலர்கள் மகிழ்வதற்குத் தடையில்லை
குணமிழந்தோர் இனிமேலும் குறிபார்த்துப் பயனில்லை
ஒன்றுபட்ட இரண்டுமனம் ஊரறிய உறவுகொண்டும்
அம்புவந்து பாயுமென்றால் அஞ்சாமல் நானெதிர்ப்பேன்!

வெ: எதிர்வருவோர் யாரத்தான்? எத்திசையில் அம்புவரும்?
உதவிக்கு நானிருப்பேன் ; உடன்வந்தே
போர்தொடுப்பேன் !

மெ: அயலார்கள் பகையில்லை; அண்டையிலும் பிணக்கில்லை
துயரத்தை உன் தந்தை தோற்றத்தில் காண்கின்றேன்
உள்ளபடி எனை உணர உண்மைநிலை புரியாமல்
கள்ளமனம் எனக்கென்றே கருதுவதும்
கொடுமையன்றோ ?
வளமான செல்வத்தை வஞ்சித்துப் பெறுவதற்கோ
இளமானே, உன்னை நான் என்வலையில்
சிக்கவைத்தேன் ?
உன்மனத்தில் என்மனத்தின் உணர்ச்சிகளைப்
பார்த்ததல்லால்
மன்னவனுய் மாளிகையில் வாழ்வதற்குப் பார்க்கவில்லை !
புன்னகையின் மையலிலே புத்தியினை இழந்ததல்லால்
பொன்மணியின் குவியலிலே புரள்வதற்குக் கருதவில்லை!

வயல்நடுவே நானிருப்பேன் வரப்போரம் நீவருவாய்
கயல்விழிகள் எனையழைக்கும் காட்சியிலே
மெய்மறப்பேன்
குடந்தூக்கி நீவருவாய் ; குளக்கரையில் நானிருப்பேன்
நடந்துவரும் உன்னழகில் நானூறு கற்பனைகள் !
சிற்றூரில் நம்காதல் செழித்தோங்கி வளர்ந்ததெலாம்
உற்றோரும் மற்றோரும் உளமார அறிவார்கள் !

வெ: நெஞ்சார நானுங்கள் நேர்மையினை நன்கறிவேன்
கொஞ்சுமெழில் கோமளத்தைக் கொள்ளையிட
நினைத்ததல்லால்
பெற்றோரின் பணத்திற்குப் பேராவல் கொண்டதில்லை !
சற்றும்இதை உணராமல் தந்தையார் பேசுகிறார் !
வருந்தாதீர் ஆருயிரே ; மாசற்ற மாண்புணர்ந்து
விருப்பமுடன் என் தந்தை வரவேற்கும் வேளைவரும்.

மெ: அதுவரையில் என்மானம் அழியட்டும் என்பாயோ ?
மதியிழந்தே காதலித்தேன் ; மணந்தபின்னும்
தன்மானம்
அழிவதுவும் அறந்தானோ ? அன்புமகள் மணந்தவனை
இழிவாக நினைக்கின்றார் ; இன்றேநான்
சொல்கின்றேன்
யானைப்பொன் இருந்தாலும் யாருக்கு வேண்டுமது ?
வானைத்தான் தொட்டாலும் மனைவாயில்
புகமாட்டேன்
என்னென்ன துன்பங்கள் எதிர்வந்து நின்றாலும்
உன்தந்தை செல்வத்தை ஒருநாளும் தொடமாட்டேன்

வெ: ஏனத்தான் மனம்போல ஏதேதோ பேசுகின்றீர் ?
மானத்தை அழிப்பதற்கோ மனைவியென
வாய்த்தேன்நான் ?
தவறாக உணர்ந்தவர்கள் சரியாகப் புரிவதற்குப்
பதறாமல் நாமிருந்தால் பண்பட்டு வருவார்கள் !
நிறைகுடத்தைப் போன்றவரே, நேர்மையென்றும்
அழிவதில்லை
கறைவந்து சேர்வதற்குக் கணமேனும் நான்ஒப்பேன்!

மெ: இனிமேலும் இவ்வூரில் இருப்பதற்கு நினைக்காதே
தனிவாழ்வை நகரத்தில் நடத்துதற்குத்
தொடங்கிடுவோம்
வளமான நிலம்பறிக்க மாப்பிள்ளை வரவில்லை;
உளமார உன்தந்தை உணர்ந்திடவே புறப்படுவோம்!

வெ: பெற்றெடுத்த இவ்வூரைப் பிரிவதற்கும் துணிந்தீரோ?
சிற்றூர்தான் செய்துவிட்ட குற்றமென்ன சொல்லுங்கள்
பயிர்த்தொழிலின் பாங்கறிவீர்; பல்லாண்டு
பணியாற்றி
உயிர்த்தொழிலாய்க் கொண்டிருந்தீர்; உதறிவிட்டுப்
போவதுவோ?
நல்லுழவைத் துறந்துவிட்டு நகரத்தில் செய்வதென்ன?
வெல்லுகின்ற தொழிலிந்த வேளாண்மைத்
தொழிலன்றோ?

மெ: அள்ளி வழங்கிவிட்ட ஆயிரம் வேலிநிலம்
துள்ளி வருகுதென்று தோள்தட்டச் சொல்வாயோ?

வெ: நமக்கென்றே அளித்தநிலம் நமக்காகக் காத்திருக்க
உமக்கெதற்குப் பிறர்நிலத்தில் உழைக்கின்ற
வீண்வேலை?

மெ: உன்தந்தை வழங்கிவிட்ட உயர்வான நிலத்தினிலே
என்னுழைப்பை நான்செலுத்த எதிர்பார்த்து
நின்றாயோ?
கள்ளிருக்கும் வாயிதழின் காவியத்தில் மூழ்கியதால்
வெள்ளெருக்க மலர்க்காடு விதித்துவிட்ட
தண்டனையோ?
உள்ளமெலாம் பறிகொடுத்தே உனக்காக வந்தவனைக்
கள்ளிநிலக் காவலுக்கோ கைகாட்டி நிற்கின்றாய்?
உள்ளிருந்த உணர்வுகளை உறங்காமல் சொன்னதனால்
முள்ளிருக்கும் காடெனக்கு முதற்பரிசாய்
வைத்தாயோ?
அந்நிலத்தில் யானுழைக்க அணுவளவும் விருப்பமில்லை
அன்னியரைத் தேடிப்போய் அடிபணிந்தும்
பிழைத்திடுவேன்!

வெ: இழிவாக நினைத்தன்றோ என் தந்தை வழங்கியுள்ளார்
இழிவெல்லாம் ஒழித்திடவே இதுவேநல்
வாய்ப்பன்றோ ?
எங்கோநீர் உழைப்பதனை இங்கேயே உழைத்திடுவீர்!
மங்காமல் நம்பெருமை வளர்வதற்கோர் ஏற்றவழி !
மண்டியிட்டு வேண்டுகிறேன் ; மறுக்காதீர் பேரன்பே!
எண்ணமெலாம் தேன்பாயும் இசைவெனக்கு
வழங்குங்கள் !
முள்நிறைந்த காடெல்லாம் நெல்விளையும் வயலாக்கிக்
கள்ளிநிலம் வளமாகக் காட்சிதரச் செய்திடுவீர் !
அயராமல் உழைப்பதிலே ஆர்வமிக்க உழைப்பாளர்
தளராமல் நிமிர்ந்துவிட்டால் தடையெல்லாம்
பொடியாகும் !



# காட்சி. 3

உறுப்பினர்கள் : **மெய்யப்பன், வெண்ணிலா.**

இடம்: **மெய்யப்பன் இல்லம்**

(மெய்யப்பன் தம் மாமனார் வழங்கிய விளைவு காணாத நிலத்தை விளையவைக்கும் முயற்சியில் ஈடுபட்டு உழைத்துவிட்டு வீடு திரும்புகிறான்)

**வெ:** உழைப்பால் இளைத்ததே உங்கள் மேனி !
பிழைப்பதற் காகவோ பெருந்துயர் நேர்ந்தது ?
வெயிலால் கறுத்து வியர்த்ததே உடம்பு !
மெய்யெலாம் புழுதி விளைந்ததே ஐயகோ !

**மெ:** வெண்ணிலா, நெஞ்சம் விம்மிட வேண்டாம்
கண்ணிலே நீருடன் கலங்குதல் ஒழிப்பாய் !
தோளிலே உறுதி ; சோர்விலா மிடுக்கு !
நாளையே வாழ்வில் நலமெலாம் சேர்க்கும் !
அஞ்சிட வேண்டாம் ! ஆறுதல் கொள்வாய்
நெஞ்சிலே துணிவை நீயே ஊட்டினாய்
துன்பியல் கண்டு துடித்திட லாமோ ?

**வெ :** அன்பரே, உங்கள் அசைவிலா உறுதியை
வாழ்த்தி வணங்கிட வார்த்தையே இல்லை !
தாழ்ந்த நெஞ்சினர் தறுக்கெலாம் சாயும்.
விளையா நிலத்தை விளைய வைத்திட
அளவிலா உழைப்பால் ஆர்வம் காட்டும்
உறுதி மிகுந்த உள்ளமே வெல்லும்
இறுதியில் தந்தையே இதனைக் காண்பார் !

**மெ:** வாழ்க்கையில் எனக்கோர் குறிக்கோள் வழங்கினாய்
ஆழமாய் நெஞ்சிலே யானும் பதித்தேன்
க்ல்லும் முள்ளும் கலந்த காட்டை
நெல்லும் கரும்பும் நிறைந்திட மாற்றுவேன் !

வெ: நீங்கள் ஒருவரே நிகழ்த்துதல் கடினம்
ஆங்கே பலரின் அரிய முயற்சிகள்
சேருமே யானுல் செழிக்கும் நிலமெலாம் !
ஏரில் மாடுகள் இணைந்திடல் போலே
உழைப்பும் பணமும் ஒன்றிட வேண்டும்
அழகிய பொன்நகை யாவும் வழங்குவேன்
பயிர்நிலம் செழிக்கப் பயன்ப டுத்துவீர் !

மெ: உயிரே, உன்நகை ஒழிவது நன்ருே ?

வெ: புன்னகை இருக்கப் பொன்னகை எதற்கோ ?
அன்பருக் களிப்பதில் அளவிலா மகிழ்ச்சி !
வெற்றிப் பணிகளை விரைவாய்த் தொடங்குக
சுற்றிலும் இன்பம் சுழன்று வருமே !



# காட்சி - 4

உறுப்பினர்கள் : இருசப்பன், எல்லம்மாள்
வெண்ணிலா, மெய்யப்பன்

இடம்: வயல்வெளி.

இரு: கொளுத்துகின்ற கடுவெயிலில் கூழ்சுமந்து வருகின்ருள்
கனைத்தபடி வருகின்ற கன்னியினை அறிவாயோ ?

எல்: பார்த்தமுகம் ஆனாலும் தூரத்துப் பார்வையிலே
பூத்தமலர்ப் பாவையினைப் புரிந்துகொள்ள முடியவில்லை

இரு: பெருஞ்செல்வர் பணத்தடியார் பெற்றமகள்
வெண்ணிலா !
விருப்பம்போல் மணந்துகொண்டு வெந்துயரில்
வாடுகிருள்
இரக்கமிலா பணத்தடியார் இவர்கள்பால் அன்பின்றி
இருக்கின்ற நிலைமையினை எண்ணிவிட்டால்
கொடுமையடி !
பொருளற்ற மெய்யப்பன் பொற்கொடியை மணந்ததனால்
பெருமையெலாம் போனதென்று பெருமூச்சு விடுகின்ருர்
விளையாத நிலமெல்லாம் மருகனுக்கே வழங்கிவிட்டார்
தளராத மெய்யப்பன் தயங்காமல் மேற்கொண்டான்
காட்டுநிலம் யாவையுமே கழனிகளாய் மாற்றுகிருன்
வாட்டங்கள் சிறிதுமின்றி வளங்கொழிக்க
உழைக்கின்ருன்

எல்: கோடைவெயில் வேளையிலும் கோதையவள்
தனைமணந்த
ஆடவனின் பசிபோக்க அயராமல் வருகின்ருள் !

இரு: கணவனுக்குத் துணையாகக் கலங்காமல் உதவுகிருள்
பெண்ணென்ருல் இவளன்ருே ! பெரும்பண்புக்
கரசியவள் !

( வெண்ணிலாவை அழைக்கிருன் )

ஏனம்மா வெண்ணிலா ஏனிந்தந் துயருனக்கு ?
மானைப்போல் வளர்ந்தாயே; வாடுவதும் முறைதானே ?

வெ: என்னத்தான் துணையிருக்க எனக்கென்ன துன்பங்கள் ?
அன்புடையார் நிழலிடையே அகமகிழ்ந்து
வாழ்வதல்லால்
குறையேதும் எனக்கில்லை !

எல்: குலமகளே நீ வாழ்க !
நிறைவான நெஞ்சுனக்கு ! நிகரில்லை வையத்தில் !

இரு: ( மெய்யப்பனை அழைக்கிறான் )
மெய்யப்பா, உனக்கின்று மேன்மையப்பா ; நல்லபணி
செய்யப்பா! உன்குடும்பம் செழிக்குமப்பா! உறுதியப்பா!

மெ: என்னப்பா இருசப்பா, ஏனிந்த வாழ்த்தப்பா ?

இரு: சொன்னபடி நடக்குமப்பா ; சோர்வின்றி உழையப்பா !



# காட்சி - 5

உறுப்பினர்கள்: இருசப்பன், பணத்தடியார்.
இடம்: வீட்டு முற்றம்.

பண: இருசா வாராய்! எங்கே பயணம்?
விரைந்து நடக்கும் வேகம் ஏனோ?

இரு: சேதி இன்னும் அறியீர் போலும்;
ஆதலால் இங்கே அமர்ந்திருக் கின்றீர்!
உங்கள் மருகனை ஊரே புகழ
எங்ஙனம் இன்னும் அறியா திருந்தீர்?

பண: இதுவோ விந்தை? ஏழ்கடல் தாண்டிக்
குதித்தது போலே கூறுகின் றீரே!

இரு: அளவிலா உழைப்பால் அருஞ்செயல் புரிந்தான்
வளமெலாம் தழைத்திடக் காட்டினை மாற்றினன்
முள்ளினைக் களைந்து நெல்லினை விளைத்த
உள்ள உறுதியை ஊரே வணங்கும்!
ஊரில் ஒருவனே கரும்பு விளைத்தான்
யாரும் அதனைச் சுவைத்திடத் துடித்தார்
நானும் அதற்கே நடந்துசெல் கின்றேன்
தேனாய் இனிக்கும் செழித்த கரும்பு!

(நண்பனை அழைக்கிறான்)

அண்ணே...............
வெறுங்கை யோடு திரும்புகின் றீரே
கரும்பை எங்கே காண வில்லை?

நண்: சிலநாள் பொறுத்துத் திரும்பி வந்தால்
வளமாய்க் கரும்பு வழங்குவேன் என்றான்;
தைமுதல் நாளில் அறுவடை நடக்குமாம்!

இரு: உடனே கிடைத்தால் உமக்கும் கரும்பைக்
கொடுக்க நினைத்தேன்; கொடுத்துவைக் காதவர்!
மருகனின் கரும்பை மாமனார் சுவைத்தால்
அருமை பெருமைகள் அப்போ தறிவார்!

பண: அருமையும் எருமையும் அறிவேன் யானே!
பெருமையாய்ப் பேசிப் பறையடிக் காதே!

# காட்சி - 6

**உறுப்பினர்கள் : மெய்யப்பன், பணத்தடியார்**
**இடம் : கரும்புத் தோட்டம்.**

மெ: ( தனக்குள் )
வைகறைப் பொழுதில் வருபவர் யாரோ?
பையவே பதுங்கும் காரண மென்ன?
கையிலே நீண்ட கரும்புக் கட்டோ?
ஐயோ திருடன்! யாவரும் வருவீர்!

பண: ( மெலிந்த குரலில் )
வேண்டாம்! வேண்டாம்! எவரையும் அழைத்திட
வேண்டாம்! கரும்பினைக் கவர்ந்தவன் யானே!

மெ: யார்நீர்? என்றன் மாமனுர் தானே?
நேரில் கண்டதும் நிகரிலா வியப்பால்
பேசவும் ஆற்றல் பெற்றிட வில்லை!

பண: ( மெலிந்த குரலில் )

மெ: ஆசையால் கவர்ந்தேன்; அமைதியாய் இருப்பாய்!
கரும்பெலாம் ஏற்பாய்; கனிவுடன் விடுப்பாய்!
புரிந்த பிழையினைப் பொறுப்பாய்! மறப்பாய்!

மெ: பிழையா? என்ன பேசு கின்றீர்?
உழைப்பால் விளைந்தவை உங்களுக் குரியவை!
எடுத்ததில் பிழையே இல்லை; நானே
கொடுக்க நினைத்தேன்; கொடுக்குமுன் எடுத்தீர்!
அறுவடை முடிந்ததும் அவளும் நானும்
கரும்புடன் வரவே கருதி யிருந்தோம்
அதுவரை பொறுக்க அவசிய மின்றி
இதுவரை வந்த இனிய வரவினை
மகிழ்வுடன் ஏற்போம்; மனைக்கு வருகவே!

## காட்சி - 7

உறுப்பினர்கள்: வெண்ணிலா, மெய்யப்பன், பணத்தடியார்.
இடம்; மெய்யப்பன் இல்லம்.

வெ: அப்பா வருக! அப்பா வருக!
இப்பொழு தேனும் இசைந்ததோ நெஞ்சம்?
அன்புடன் காண ஆவலாய் இருந்தேன்
பொன்னுள் இன்றே புலர்ந்திடக் கண்டேன்!
அன்னை நலமோ? அவரும் இங்கே
வந்தி ருந்தால் மகிழ்ந்தி ருப்போம்!

மெ: ஒவ்வொரு நாளும் உங்கள் நினைவுகள்
ஒவ்வொரு பொழுதும் உங்கள் பேச்சே!

பண: அருமை மகளே! அன்பு மருகரே!
அறியாப் பிழைகள் ஆயிரம் செய்தேன்
இருப்பினும் என்னை இன்முகம் காட்டி
வெறுப்பிலா தழைத்து மேன்மைகள் செய்தீர்!
நினைத்திட நினைத்திட நெஞ்சம் நெகிழுமே
எனைமனம் ஏற்றதோ? எப்படி முடிந்தது?
கரும்பாம் மகளைக் கவர்ந்தீர் என்றே
விரும்பி உமக்கு வெந்துயர் தந்தேன்!
விளையா நிலங்கள் வழங்கினேன் பாவி
அளவிலாத் துன்பம் அடைந்துவிட் டீரே!
உழைப்பால் வளர்ந்த உங்கள் கரும்பை
பிழையாய் இன்று கவர்ந்து விட்டேன்!
அன்பு மருகரே, அதற்கோர் தண்டனை
இன்றே எனக்கு விதித்திடு வீரே!

மெ: இன்று நீங்கள் எம்மோ டிருப்பீர்!
உண்டு மகிழ்ந்தே உம்மனை செல்வீர்

வெ: இதுவே உங்களுக் கேற்ற தண்டனை!

பண்: விதித்த தண்டனை வேதனை செய்யும்
அன்பே நெஞ்சில் அம்பாய்ப் பாய்ந்து
வன்மனக் கொடியனை வாட்டும்! வாட்டும்!
அருமை மிகுந்த ஆற்றல் காட்டிப்
பெருமை பெற்றது பெரிதும் விந்தையே!
வேதனை யெல்லாம் வென்று முடித்துச்
சாதனை செய்தது தனிப்புகழ் ஆகும்!
சிலநாள் சென்ருல் பொங்கல் திருநாள்
உளமெலாம் மகிழ்ச்சி ஊரெலாம் விளங்கும்
தலைப்பொங் கலன்ரே தவருமல் வருவீர்
மலையென மகிழ்ச்சி மனையில் பெருகுமே!
என்மனை வருக! இருவரும் வருக!
சென்றதை மறந்து சிரிப்புடன் வருகவே!



## காட்சி - 8

உறுப்பினர்கள் : பணத்தடியார், கன்னி,
வெண்ணிலா, மெய்யப்பன்.
இடம் : பணத்தடியார் இல்லம்.

பண: பொங்கலோ பொங்கல்! பொங்கலோ பொங்கல்!
எங்கும் பொங்கல் இனிமை பரப்புக!

கன்: என்மகள் வாழ்வில் இனிய பொங்கல்!
புன்னகை பொங்கும் பூமுகம் கண்டே
என்மனம் பொங்கும்; என்மனை பொங்கும்!

வெ: அன்னையும் தந்தையும் அன்புடன் இணைந்தே
எம்மை வாழ்த்தும் இனிமையால் பொங்கும்
பொங்கலே வாழ்க! பொங்கலே வாழ்க!

பண: அருமை மருகரே! அருமை மருகரே!
பெருமையால் வீங்கிப் பேசு கின்றேன்
கரும்பினை விளைத்தீர்; கரும்பென வாழ்க்கை
திரும்பிடக் காணும் திருநாள் இதுவே!
பொங்கல் கரும்பு புதிய வாழ்வைப்
பொங்கிடச் செய்து புதுமைகள் காட்டும்!

மெ: பொங்கலே வாழ்க! பொங்கலே வாழ்க!
என்மனப் பண்பை இனிதே விளக்கிய
செந்தேன் பொங்கலே! சிறப்பெலாம் தந்தாய்!
வந்தனை செய்து வழிபடு கின்றேன்!
பொங்கலே பொங்குக! புவியெலாம் பொங்கவே!

# மாதரசி

## காட்சி - 1

**உறுப்பினர்கள்: தலைவர் அறவாணன், மணிமாறன்**
**இடம்: கல்லூரி அரங்கம்**

**தலை:** அழகுதமிழ்க் கரையோரம் பழகிவரும் இளைஞர்களே,
கல்லூரி அரங்கத்தில் சொல்லாடும் பட்டிமன்றம்!
அகிலத்தின் திசைகளிலே அரும்பணிகள் ஆற்றுவதில்
புகழ்மிகுந்தோர் ஆண்குலமா பெண்குலமா எனும்பொருளில்
பட்டிமன்றம் நடப்பதனைப் பார்த்துமனம் மகிழ்ந்தீர்கள்!
தொட்டுவந்த நினைவுகளைத் தொகுப்புரையாய் வழங்கிடவே
ஆண்குலத்தின் அணித்தலைவர் மணிமாறன் முழங்கிடுவார்!

**மணி:** பட்டிமன்றத் தலைவருக்குப் பைந்தமிழில் வணக்கமையா!
கட்டிளமைக் காளையரே, கல்லூரித் தோழியரே,
கட்டிவந்த கவிதையிலே கைகூப்பி வணங்குகிறேன்!
சமுதாயம் வளர்ப்பதிலே தகுதிமிக படைத்தவர்கள்
குமிழ்சிரிப்புக் குமரிகளா? குலைநடுங்காக் காளைகளா?
அகிலத்தில் நன்மைமிக ஆற்றுபவர் ஆண்குலமா?
நகைபுரியும் செவ்விதழால் நமைமயக்கும் பெண்குலமா?
என்றிங்கே பட்டிமன்றம் ஏற்படுத்திப் பேசவைத்தீர்!

ஆண்குலத்தார் அணிவகுத்தார்; அணிவகுப்பின்
தலைவன் நான்;
இறுதியிலே தொகுத்துரைக்க எதிர்வந்து
நிற்கின்றேன்!
சமுதாயத் தேருக்குச் சரியான சாரதிகள்!
தரணியெனும் வயலுக்குத் தவழ்கின்ற
மேகங்கள்!
சமைகின்ற புத்துலகின் தலைவாயிற் கோட்டைகள்!
சாகாத வரலாற்றில் தலைநிமிர்ந்த எழுத்துக்கள்!

அண்டவெளிப் பெருமையெலாம் ஆண்குலத்துள்
அடங்கிவிடும்
ஆணிப்பொன் எடுப்பவரை யாரென்பீர்
தோழியரே?
கண்டிருந்தும் காணார்போல் கதையுரைக்க வந்திரே;
கருங்கடலில் ஒளிமுத்தின் கரம்பற்றி
இழுப்போர்யார்?

கலம்செலுத்திக் கரைசேர்த்துக் கைநிறையப்
பொருள்ஈட்டிக்
காடெல்லாம் நாடாக்கிக் கணக்கற்ற வளம்தேக்கி,
நிலையாக நெடுவையம் நிற்கின்ற உரமாக்கி,
நிகழ்கால விளக்கினிலே நெய்யூற்றி
எரிப்பவர்யார்?

ஆணென்று சொல்வதற்கு நாணந்தான் தடுக்கிறதோ?
அப்பாவால் படிக்கின்றீர்; அதையேனும்
நினைத்தீரோ?
ஆணொருவன் துணையின்றி யார்துணையில்
வாழ்வீர்கள்?
ஆகையினால் தோழியரே ஆண்பெருமை
மறுக்காதீர்!

(மாணவர்கள் கைதட்டுதல்)

தலை: மண்பார்த்த பெண்குலத்தார் விண்பார்க்கும்
வளம்உரைக்க
பெண்குலத்தார் சார்பாகப் பேசிடுவார் மாதரசி!

மர்த: பாட்டுநடைத் தமிழ்பேசும் பட்டிமன்றக் காளையரே,
கேட்டிடுவீர் எம்பேச்சைக் கிழித்தெறிவோம்
பகைமூச்சை !
எட்டுகதை கட்டிவந்தே எதிர்நிற்கும் ஆண்குலமே,
கொட்டாவி விடுவதற்குக் கூடிவிட்டோர் இங்கில்லை
நட்டுவிட்ட பொய்க்கதையின் நரம்புகளை
வெட்டிடுவோம் !
எட்டுதிசை வரலாறும் எழுதிவைக்கும் எம்கரங்கள் ;
பெண்துணையை வெறுக்கின்ற பெருமுனிவர் யாரிங்கே ?
கண்ணாலே பார்க்கின்றோம் ; காட்டுங்கள்
உம்முகத்தை !
அப்பாவால் படித்தாலும், அண்ணாவால் படித்தாலும்
அப்பாவைப் பெற்றவளை யாரென்பீர் தோழர்களே ?
சமுதாயம் வளர்ப்பதிலே தாழ்ந்தவரோ
பெண்குலத்தார் ?
சமுதாயக் கோட்டையிலே தவழ்ந்தாடும்
கொடிநாங்கள் !
கட்டிலுக்கும் தொட்டிலுக்கும் மட்டுந்தான்
கன்னியரோ ?
பட்டாள அணிவகுப்பில் பாவையரின் நடைபார்ப்பீர் !
பிஞ்சுவிரல், பஞ்சுவுடல், கொஞ்சுமொழி,
அஞ்சுநடை,
தஞ்சமெனப் பழையகவிச் சரங்கள் புரியாதீர் !
முத்தங்கள் விதைக்கின்ற மேர்கநிலம் நாங்களென்று
பித்தத்தால் பெண்ணினத்தைப் பின்னுக்குத்
தள்ளாதீர் !
வண்ணப்பொன் புன்னகையில், வான்வில்லின்
மின்னொளியில்,
எண்ணத்தேர் ஊர்வலத்தில், ஏழிசையின் நாடகத்தில்
எங்கள்குல ஆட்சியினை எட்டியெட்டிப் பார்க்கின்றீர்
இங்குவந்தே புரியார்போல் ஏதேதோ புலம்புகின்றீர் !
தடந்தோளாம் ; விரிமார்பாம் ; தரணிபுகழ்த்
தலைவர்களாம் !
அடக்குமுறை மன்னர்களே ! யார்முன்னே
அளக்கின்றீர் ?

தாய்மையெனும் தவம்புரிந்து தருகின்றேம் புதியஉயிர்
ஆய்ந்தாய்ந்து பார்த்தாலும் அதற்கீடு சொல்வீரோ?
பிள்ளைகளை வளர்ப்பதிலும் பேரறங்கள் காப்பதிலும்
வெள்ளைமனக் கன்னியரை விஞ்சுவரோ
ஆண்குலத்தார்?

அரசியலார் ஆட்சிமுறை; அங்காடி வாணிகங்கள்;
கரைகாணுக் கல்விநலம்; கணக்கற்ற தொழிற்கூடம்;
விளையாட்டுச் சாதனைகள்; விஞ்ஞானச் சோதனைகள்;
விளைத்துவரும் வேற்றியெலாம் வேல்விழியார்
கரமன்றோ?

சமுதாயம் வளர்ப்பதிலே தலைப்பங்கு பெண்களுக்கே!
(பெண்கள் கைதட்டுதல்)

தலைவர் முடிவுரை:

அகிலத்தில் பெரும்பணிகள் ஆற்றுகின்ற தன்மையிலே
தகுதிமிக்கோர் ஆண்குலமா? பெண்குலமா?
எனும்பொருளில்
இதுவரையில் இனிதான பட்டிமன்றம் கேட்டீர்கள்;
மதித்திறத்தால் இரண்டணியும் வல்லமைகள்
பேசிநின்றார்!

சமுதாயம் வளர்ப்பதிலே சரிபங்கு பெற்றவர்கள்
தகைசான்ற ஆண்குலமும் பெண்குலமும் என்றிடுவேன்
ஆணின்றிப் பெண்ணில்லை; பெண்ணின்றி ஆணில்லை!
ஊன்றிநின்று சிந்தித்தால் உண்மையொன்று
புலனாகும்!
பேருலகில் பெண்ணினந்தான் பெரும்பணிகள்
புரிந்தாலும்
சீருடைய அவர்நலங்கள் செம்மையுடன் காப்பவர்கள்
சிங்கம்நிகர் ஆண்குலத்தார் செகத்தினிலே
திறன்மிக்கார்
சமுதாய வளர்ச்சியிலே தலைப்பங்கு பெற்றவர்கள்;
ஆதலினால் ஆண்குலத்தின் அணித்தலைவர் பரிசேற்பார்
மாதர்களே வருந்தற்க; வாழ்த்துரைகள் உங்கட்கே!

(மாணவர்கள் ஆரவாரம்)

# காட்சி - 2

**உறுப்பினர்கள் : சொக்கழகன், சேதரசு, மணிமாறன், மாதரசி, மற்றும் மாணவ மாணவியர்.**

**இடம் : கல்லூரி வாயில்**

(மாதரசியையும் மற்ற பெண்களையும் சூழ்ந்து கொண்டு, சொக்கழகனும் அவன் நண்பர்களும் கேலி செய்தல்)

**சொ:** தொண்டுசெய்ய வந்தஎங்கள் தோழி — நீர்
தொட்டபணி யாவையுமே வாழி ! — உம்மைக்
கண்டுமகிழ் வடைந்திடவே
காலைவரும் என்றிடுமே
கோழி — ஒரு
நாழி ! (நகைப்பொலி)

**சேத:** வாட்படையும் வேற்படையும் போதும் — அவை
வட்டமிடும் ஆண்குலத்தை மோதும் ! — ஒரு
மாட்டுவண்டி பூட்டுவதில்
மாடிரண்டும் சண்டிசெய்தல்
ஏது — மண்
மீது! (நகைப்பொலி)

**சொ:** கோபமுற்ற நங்கையரே பாரும் — ஒரு
கொஞ்சுதமிழ்க் கோலமொழி தாரும் ! — இங்கு
சாபமிட்டு வேகமுடன்
சாய்த்திடவே சற்றருகே
வாரும் — எம்மைச்
சேரும் ! (நகைப்பொலி)

**சேத:** உங்களுக்கே உங்களுக்கே உலகம் — இதில்
உம்பொறுப்பே உலவுகின்ற கலகம் ! — புகழ்
எங்களுக்குக் கிடைப்பதில்லை
எப்பொழுதும் உமக்கிடுவோம்

திலகம்—நாணம்
விலகும்! (நகைப்பொலி)

(மணிமாறன் வருகிறான்)

மணி: (சினத்துடன்)
நண்பரே, போதும் உங்கள்
நகைச்சுவை; இங்கே பெண்கள்
கண்ணியம் குறைக்க வேண்டாம்
கடுமொழி உளற வேண்டாம்!

(மாதரசியின் பின்னால் சென்று)

சற்றுநில் பெண்ணே, உன்றன்
சர்க்கரை மொழிகள் கேட்ட
பற்றினால் தொடருகின்றேன்
பரிசினைப் பெற்ற பாவி;
சுற்றிலும் உன்னைச் சூழ்ந்து
சொற்களால் சுட்டார் நண்பர்
முற்றிலும் வருந்தி வந்தேன்
முகமலர் திருப்ப லாமோ?

எனக்கெனப் பரிசு வந்தும்
என்மனம் நிறைய வில்லை;
உனக்கதில் பங்கும் உண்டே!
உண்மையில் ஆணும் பெண்ணும்
இணைகரம் கொண்டா லன்றோ
இணையிலா நன்மை உண்டாம்!
கணைவிடும் விழிகள் மாற்றிக்
கனிவுடன் பரிசை ஏற்பாய்!

மாத: (சினத்துடன்)
பரிசேற்ற ஆணவத்தால் பலர்பார்த்து நகைப்பதற்கோ பசப்பு கின்றீர்?
கரிபூசி என்முகத்தைக் கறைபடுத்த கைத்திறமா காட்டு கின்றீர்?

நரிவேலை நடத்துதற்கோ நினைக்கின்றீர்? நடக்காது
நடக்கா தென்பேன்!
பரிவோடும் நயத்தோடும் வந்ததெலாம் பாவையிவள்
பணிவா னென்றோ?

மணி: சினத்துடன் பேசு கின்றீர்;
செந்தழல் வீசு கின்றீர்!
கணத்திலே மறந்து விட்டேன்;
கைகளைக் குவித்து நின்றேன்!
நினைத்தது மாற்றி என்றன்
நெஞ்சினைப் புரிந்து கொள்வீர்
கனத்ததோர் பரிசை ஏற்றுக்
களிப்பினில் மூழ்க வைப்பீர்!

மாத: சொல்லியசொல் மாருது; சுண்டைக்காய் பரிசுடனே
தொடர வேண்டாம்!
வெல்லுகிற உம்திறத்தைப் பட்டிமன்ற மேடையிலே
வைத்துக் கொள்ளும்!



# காட்சி - 3

உறுப்பினர்கள் : சேதரசு, சொக்கழகன், மணிமாறன், மற்றும் நண்பர்கள்.

இடம் : கல்லூரி விடுதி.

(தேர்வு நெருங்குகிறது. மணிமாறன் படிப்பில் சிந்தனையின்றி மாதரசியை நினைத்து வாடிக் கொண்டிருக்கிறான். நண்பர்கள் கேலி செய்கின்றனர்.)

சேத: சிரித்தமுகம் எங்கேடா? சிந்தனைகள் என்னேடா?
விரித்தவலை வீழ்ந்தனையோ? வேல்விழியால்
சாய்ந்தனையோ?

மணி: ......................

சொ: தேன்வெல்லும் செந்தமிழைச் செவிகளிலே தருபவனே
வான்மழைபோல் வருகின்ற வாய்மொழிகள் எங்கேடா?

சேத: கல்லூரி விடுதியிலே கவலையுடன் இருப்பார்யார்?
சொல்லாடி மகிழாமல் துள்ளுநடை போடாமல்
கன்னத்தில் கைவைத்தாய்; கண்மூடி
அமர்ந்துவிட்டாய்;
எண்ணத்தில் வீசிவிட்ட கன்னிப்பெண் மின்னல்யார்?

மணி: வெண்சோற்று வீரர்களே, வேலையில்லாக் காரணத்தால்
உளறுவதே தொழிலாகி ஊர்சுற்றும் நவமணிகாள்!

சொ: விற்புருவம் வளைப்பவர்க்கு விடைசொல்ல மாட்டாமல்
சிற்றிடையார் முறுவலெனும் செந்தழலுக் காற்றுமல்
கொடிமாதர் நடைபார்த்துக் குறிக்கோளே இல்லாமல்
படைக்கலனை இழந்துவிட்ட படுகளத்து வீரனைப்போல்
அடைக்கலத்தைக் காணுமல் ஆறுதலே இல்லாமல்
எங்கெங்கே ஓடினையோ? என்னென்ன ஆயினையோ?

சேத: அங்கங்கே துணைவருவோம்! அஞ்சாமல் சொல்வீரா?
சொல்–வீரா! ஏனிந்த சோர்வப்பா? எத்தனைநாள்?

மணி: எவன்பெயரை எவள்பெயரை எப்படிநாம்
இணைத்திடலாம்?
அவன்தலையும் அவள்தலையும் அழகாக மோதாதோ?
என்றெண்ணி எப்போதும் எட்டுதிசை வட்டமிடக்
காத்திருக்கும் என்னருமைக் கழுகுவிழி நண்பர்களே;
கடுகளவை மலையாக்கிக் கடலாக்கிக் கைகால்கள்
உடன்வைத்து மந்திரங்கள் உருவேற்றிப் பார்ப்பதிலே
சொக்கழகன் நண்பர்கள் சூராதி சூரர்கள்!
தக்கபடி ஆள்பார்த்தும் பக்கபலம் தானீர்த்தும்
சேர்த்தபழி போதுமடா! சொல்லுங்கள் அறைநோக்கி!

சொ: அன்றொருநாள் முழக்கமிட்ட ஆண்சிங்கம் நீதானே?
இன்றந்த நினைவெல்லாம் எங்கேடா? எண்ணிப்பார்!

சேத: எல்லோரும் படிக்கின்றூர்; எப்போதும் முதல்வன்நீ!
பாடத்தில் உன்பார்வைப் பதியாமல் கல்லூரிக்
கூடத்தில் உன்கவனக் குறிமாறிப் போனதென்ன?
(நகைப்பொலி)



## காட்சி - 4

உறுப்பினர்கள் : **பேராசிரியர் நல்லவர், சொக்கழகன், சேதரசு, மணிமாறன், மாதரசி, மலர்க்கொடி, மல்லிகா மற்றும் மாணவ மாணவியர்.**

இடம் : **வகுப்பறை.**

**பேரா:** முடிந்துவிட்ட விடைத்தாள்கள் மீண்டும் உங்கள்
முகம்பார்க்க வருகிறது ; கதைகள் பேசிக்
கடந்துவிட்ட நாட்பயனை நீங்கள் காணும்
கண்ணாடி வருகிறது ; பாரீர் ! பாரீர் !

(மாணவர்கள் ஆர்வத்துடன் விடைத்தாள்கள் வாங்குவதால் இரைச்சல் ஏற்படுகிறது. பேராசிரியர் அமைதி அமைதி என்று கூவி அமைதி படுத்திவிட்டு மேலும் பேசுகிறார்)

வெள்ளைத்தாள் மீதினிலே மனம்போல் நீங்கள்
விளையாடிப் பார்த்துவிட்டீர் ! திருத்து வோரை
வள்ளல்போல் கனவுகண்டீர் ; உங்கள் கல்வி
வறுமையினை நன்றாகக் காட்டிக் கொண்டீர் !
அள்ளிடுவோம் மதிப்பெண்கள் என்ற தெல்லாம் !
அரைகிணறு தாண்டியவன் கதையா யிற்றே !
துள்ளிதினம் கொட்டங்கள் அடித்தீர் ! அந்தத்
துடுக்கடக்கும் அங்குசமாம் விடைத்தாள்
காண்பீர் !
பத்துமுறை கண்ணாடி பார்ப்பீர் ஆனால்
பாடங்கள் மட்டும்நீர் பார்க்க மாட்டீர் !
நித்தமுமே திரைப்படங்கள் காண்ப தென்றால்
நீரேதற்கு ? சோறேதற்கு ? வேண்டா மென்பீர் !
எத்தனையோ படமெழுதி நெஞ்சில் வைப்பீர் !
என்றாலும் பாடங்கள் எழுத மாட்டீர் !
முத்துறங்கும் பொன்னுறங்கும் என்ப தாலோ
மூலையிலே அடிக்கடிநீர் உறங்கு கின்றீர் !

மல்: மாதரசி, உன்மதிப்பெண் என்ன?

ஏடி

மாத: மல்லிகா! உன் மதிப்பெண்ணை மறைக்கின் ருயோ?

சொ: சேதரசா, என்னப்பா திகைத்து விட்டாய்?
திரித்ததெல்லாம் பொய்த்ததுவோ?

(நகைப்பொலி)

மாத: ... ... ...என்ன மல்லி
காதோரம் ஓதுகின்ருய்?

........கூட்டிப் பார்த்தேன்

மல்: கால்மதிப்பெண் குறைகிறதே!

மாத: ஆழ்ந்து நோக்கி
நீதேடும் கால்மதிப்பெண் உனக்கு வெற்றி
நிலாச்சோறு வழங்கிடுமோ? போடி முட்டாள்!
(நகைப்பொலி)

பேரா: பேச்சொலிகள் அடங்கட்டும்; முட்டை பெற்ற
பெருமைகளை முடக்குங்கள்; தோல்வி கண்டும்
பேய்ச்சிரிப்பு பிறக்கிறதோ? வகுப்பில் நெஞ்சைப்
பிணக்காமல் அளக்கின்ற கதைகள் என்ன?
ஏச்சினையே பெறுவதென்ரே துணிந்து விட்டீர்?
எதிர்காலம் புயலாகும்; புலியாய் மாறும்!
தீச்சுடுமே என்றறிந்தும் விலகா விட்டால்
தெருப்புழுதி பறப்பதுபோல் பறந்து போவீர்!

மணிமாறா, உனக்கென்ன மண்டை விக்கம்?

(வகுப்பில் பெண்கள் சிரித்தல்)

வழக்கம்போல் முதல்மதிப்பெண் எங்கே? என்ன
பிணியாலோ தோற்றுவிட்டாய்? உன்னை என்றும்
பிரியாத வெற்றியையா பிரிந்தாய்? எந்த
அணியோடு சேர்ந்துகெட்டாய்? என்றன் கேள்வி
யாவிற்கும் விடைகள் எங்கே? .........

மணி: மன்னி யுங்கள்
பணிவோடு வேண்டுகிறேன்; இனிமேல் தோல்வி
பற்ருமல் என்னைநான் காத்துக் கொள்வேன்!

(பெண்கள் நகைப்பு)

## காட்சி - 5

**உறுப்பினர்கள் : மாதரசி, மல்லிகா, மலர்க்கொடி மற்றும் தோழியர்**

**இடம் : (கல்லூரி வாயில்)**

(மணிமாறன் வகுப்பில் பேராசிரியரால் பழிக்கபட்டதைப் பற்றி மாதரசி தன் தோழியருடன் பேசிச் சிரிக்கிருள்)

**மாத:** காலை செருக்கழிந்து போனுன் — அவன்
காணும் புழுவெனவே ஆனுன் ;
தோலை நிமிர்த்துவதும் தவறு — நம்கால்
தொட்டுப் பணிந்திடுதல் அழகு ;
(நகைப்பு)

**மல்:** வானை இடிப்பதுபோல் பேச்சு — வெறும்
வறட்டுத் தவளையென ஆச்சு !
மானம் இழந்தபின்பு மூச்சு — தமிழ்
மண்ணில் இருப்பதெனில் ஏச்சு ! (நகைப்பு)

**மாத:** சேலை உடுத்திடவும் வேண்டும் — ஊர்
தெருவை வலம்வருதல் வேண்டும் !
நாளை அதுநடக்கும் பாராய் — கண்ணில்
நமக்கும் விருந்திருக்கும் வாராய் ! (நகைப்பு)

**மல்:** முதுகில் அடிவிழுந்த ஓசை — பின்னும்
முறுக்கி வளர்ப்பதென்ன மீசை ?
பதுங்க புதர்தேடும் முயல்கள் — பெண்
பாயும் வரைக்குமிவர் புலிகள் ! (நகைப்பு)



## காட்சி - 6

உறுப்பினர்கள் : **மணிமாறன், மாதரசி**

இடம் : **பெண்கள் விடுதி.**

**மணி:** மாதரசி, என்றன் மனத்தரசி நீதானே !
காதல் கணைபட்டேன் ; காக்க உடன்பட்டால்
வாழ்க்கை எனக்குண்டு ; வாராயேல் தீராத
ஏக்கத்தில் தேம்பி இடியாதோ என்னுயிரே !

**மாத:** கட்டிக் கரும்பென்பீர் ; கண்ணே திரும்பென்பீர் !
ஒட்டும் விருந்தென்பீர் ; ஓயா தருந்தென்பீர் !
தொட்டு முடிந்துவிட்ட தொண்ணூறு நாட்களிலே
எட்டி நடவென்பீர் ; எங்கோ கிடவென்பீர் !
அன்பென்ற பொய்யுரைகள் அன்றுட நாடகங்கள் !
இன்பக் கதையெல்லாம் ஏமாற்றுத் தோரணங்கள் !
வண்ணச்சொல் வார்த்தையெலாம் வாலிபரின் கைச்சரக்கு
வானத்துத் தாரகையாய் வண்ணப்பொன் மேனியராய்
கானத்தில் பூங்குயிலாய் கள்ளூறும் மாமலராய்
வாழ்ந்துவரும் கன்னியரை வாட்டுகின்ற ஆண்குலத்தீர்!
தாழ்ந்த மனமுடையீர் ! தள்ளுமுன்னே போயகல்வீர்!

**மணி:** கல்லூரிப் பாடங்கள் கற்பதிலும் சோர்ந்துவிட்டேன்
எல்லாமே உன்மயக்கம் ! எந்நாளும் வாடுகிறேன் !
மெய்க்காதல் கொண்டுவிட்டேன் ; மேலான நுண்ணுணர்வைப்
பொய்த்தாகம் என்றுலும் போகேனே கண்மணியே !

**மாத:** தோற்றவள் நான் ; என்னைத் தொடராதீர் ; வென்றுவிட்ட
ஏற்றத்தில் நிற்பவரே ; ஏமாற்றம் காணுதீர் !
வீரத்தோள் ஆண்களென வெற்றிப் பரிசடைந்தீர்

கூரம்புப் பேச்சால் கொடிநாட்டி நின்றீரே!
மாவீரர் ஏனிங்கு வந்தாரோ? மெல்லவந்து
சாவடிகள் தூக்குவதால் காதலியாள் வாய்ப்பாளோ?

**மணி:** ஆண்குலத்தார் ஆற்றலினை அன்றுநான் பேசிநின்றேன்
மாண்புடைய பெண்குலத்தில் மாசேற்றிக் காட்டுகின்ற
நோக்கம் எனக்கில்லை; தூயமனம் கொண்டவன்நான்
மேடை அழகுக்கு வீசிவிட்ட சொற்களினை
ஓடைக் குளிர்மொழியாள் உண்மையெனக்
கொள்ளுவதோ?
ஒப்பிடுவாய் என்காதல்; உள்ளன்பால் பேசுகிறேன்!

**மாத:** எப்படிநான் ஒப்பிடுவேன்? எண்ணுவீர்! நானென்ன
காண இளைத்தவளோ? காதல் விளையாட்டில்
நாணப் படாதவளோ? நன்றாய் அறிவீரோ?
பார்த்தவுடன் காதலென்பீர்! பல்லிளித்துப்
பின்வருவீர்!

காத்திருப்பேன் என்பீர்கள்! காலடியில் வீழ்ந்திடுவீர்!
ஏமாந்த வேளையில் ஏதோ மடல்தீட்டித்
தேமாங் கனியென்று சிங்காரப் பாட்டிசைப்பீர்!
அந்தக் கதையெல்லாம் யான்வேண்டேன்!
யான்தீண்டேன்!

**மணி:** நல்லவன்நான்; உன்வாழ்வில் நஞ்சு கலப்பேனு?
வல்லவள்நீ; என்வாழ்வில் வாய்த்துவிட்டால்
வையத்தில்
எல்லையிலா இன்பந்தான் கொள்ளையோ
கொள்ளையென்பேன்!

**மாத:** இந்த எழில்மகளை என்ன நினைத்தீர்நீர்?
கனல்கக்கும் என்கண்ணைக் காணுமுன்னே நல்ல
உணர்விருந்தால் நிற்காமல் ஓடிடுவீர்! ஓடிடுவீர்!!
நாடாமல் நிற்பதனை நன்றாய் அறிந்தபின்னும்
பாடாதீர் பல்லிளிக்கும் பாட்டு!

# காட்சி - 7

**உறுப்பினர்கள் : மாதரசி, அவள் தந்தை அண்ணல், தாய் கார்குழலி.**

**இடம் : மாதரசி இல்லம்**

**கார் :** பருவ மகளேஎன் மாதரசி — கொஞ்சும்
பைங்கிளி போன்ற எழிலரசி !

**அண் :** திருமணம் எண்ணி முடித்துவிட்டால் — நாணிச்
சிவக்கும் மலர்முகம் பார்த்திடுவோம் !

**மாத :** ஈன்று வளர்த்தீர் அருமையுடன் — உம்மிடம்
என்ன மொழிவேன் இளையவள் நான் ?
வேண்டுதல் ஏதும் எனக்கில்லை — நீங்கள்
விரும்புதல் போல மணம்முடிப்பீர் !

என்னிடம் வந்தான் ஒருமூடன் — காதல்
என்றவன் பல்லை இளிக்கின்றான் !
உன்னை மணப்பேன் உறுதியென்றான் – நான்
ஊரே சிரித்தல் இறுதியென்றேன் !

மேடையில் என்னையே வென்றுவிட்டான் – அவன்
மெல்லவே வந்தென்முன் நின்றுகெட்டான் !
ஓடி மறைவாய் விரைவிலென்றேன் – அவன்
உள்ளம் திருந்திட மருந்தளித்தேன் !

வென்றவன் தன்னை மணப்பதுவோ ? – அவன்
வெற்றியில் நெஞ்சைப் பிணைப்பதுவோ ?
சென்றவன் கைகளைப் பற்றுவதோ ? – என்
சீறும் உணர்வுகள் வற்றுவதோ ?

**அண் :** உன்மனம் போல மணம்செய்வேன் – எதற்கும்
உள்ளம் கலங்கா திருமகளே !
என்னுயிர் நீயே அறிவாயே – உன்னை
இன்னல் தொடரவும் பார்ப்பேனோ ?

**கார் :** நல்ல குடியில் பிறந்தவனும் – உன்னை
நாளை மணக்கும் மணமகனே !
செல்வம் அதிகம் பெறவில்லை – கல்விச்
சிறப்புகள் பெற்ற மலையப்பன் !

# காட்சி - 8

உறுப்பினர்கள் : மணிமாறன், சொக்கழகன்
இடம் : பூங்கா.

சொ: மணிமாறா, உன்னை வலைபோட்டுத் தேடும்
பணிதந்தாய் ; ஏமாற்றம் பாய்கின்ற நேரத்தில்
எப்படியோ கண்டுவிட்டேன் ! ஏன்மறைந்து
கொண்டுள்ளாய் ?

மணி: வாழ்வில் கடைகெட்டு வாழும் நிலைபெற்றேன் !
கண்ணில் இடம்பெற்ற கன்னிமயில் மாதரசி
என்னில் கலந்துவிட்டாள் ; என்னை இழந்தேன்
நெடுவானின் உச்சியிலே நின்றிருந்த என்னை
முடிசாய்ந்த மன்னன்போல் முற்றும் கவிழ்த்திட்டாள்!
கார்மேகக் கோட்டை கலைந்துவிழ நேரிடலாம்
நீரோடும் ஆறு நிலம்மறந்து போய்விடலாம்
மூச்சுக்கும் பேச்சுக்கும் மூலப் பொருளாகித்
தீச்சுடராய் நெஞ்சில் தெரிகின்ற மாதரசி
என்னைத் துறப்பதனை எப்படிநான் ஏற்றிடுவேன் ?
மாலையிடும் நாள்குறித்த மங்கை அழைப்பிதழ்பார்
சோலை நினைவுகளில் சூறு வளியானாள் !

சொ: எட்டாத மாங்கனி என்றபின் உள்ளத்தில்
ஒட்டாமல் வெட்டிடுவாய் ; உன்துன்பம்
தேய்ந்துவிடும் !
கைகூடாக் காதலுக்குக் கண்ணீரைச் சிந்தாதே !
பொய்போல எண்ணிவிடு; போகட்டும் என்நண்பா !

மணி: என்னுயிரே போகட்டும் என்றாலும் கேட்டிருப்பேன்
கண்ணுள் மணியாகக் காத்திருந்த காதலினைத்
தூக்கி எறிவதோ ? சொல்லால் சுடுகின்றாய் !
வாழ்க்கை எனக்கில்லை வாழுவதும் நானில்லை
சாக்காடு தப்பாது தாழ்ந்து !

# காட்சி - 9

**உறுப்பினர்கள் : அண்ணல், கார்குழலி, மாதரசி, மலையப்பன்.**

**அண்:** திருமணம் நன்ருய் முடிந்தது — பெற்றவர்
சிந்தையில் இன்பம் படிந்தது!

**கார் :** இருமனம் ஒன்ருய் இணைகவே — என்றும்
இல்லறம் அன்பில் பிணைகவே!

**மாத:** வாழ்த்தொலி கேட்டு மகிழ்கிருேம் — நெஞ்ச
வார்த்தையால் உம்மைப் புகழ்கிருேம்!

**மலை:** ஆழ்த்தும் இனிமையில் சாய்கிருேம் — உங்கள்
அன்பில் இருவரும் தோய்கிருேம்!

**மாத:** நாளை முதலே குடித்தனம் — தனியே
நாங்கள் இனிதாய் நடத்துவோம்!

**மலை:** நாளை முதலே நடத்தவோ — வாழ்வை
நாமே சுழலில் கிடத்தவோ?

**மாத:** பெற்ருேர் நிழலில் இருப்பதோ — இதில்
பெருமைகள் எண்ணிச் சிரிப்பதோ?
மற்ருேர் பழித்திட நிற்பதோ — தன்
மான உணர்வினை விற்பதோ?

**மலை:** கற்பனை செய்தால் வருத்தமே — அதனுல்
காட்டுவேன் நல்ல திருத்தமே!
பெற்ருேர் உடனே இருக்கலாம் — நலம்
பேணுவார் நாமும் சிறக்கலாம்!

**மாத:** நலமும் வளமும் சிறக்கவோ — நாம்
நன்மைகள் தேடிப் பறக்கவோ?
குலையா மனத்தின் உறுதியிலே — வளம்
குலவிடும் வாழ்வின் இறுதியிலே;

பெற்ருேர் குவித்த பணத்திலே — வாழ்வைப்
பின்ன மறப்போம் கணத்திலே ;
கற்ருேர் இகழ்ந்திடும் வாழ்விலே — எதிர்
காலம் புதைந்திடும் தாழ்விலே !

மலே: அவர்பணம் என்பதும் நம்பணம் — இதில்
யார்பழி ஏற்றிடும் நம்மனம் !
தவருய் நிணத்ததே உன்மனம் — வாழ்வில்
தவழ்வதும் எங்கே நறுமணம் ?

அண்: இல்லறம் நல்ல பழக்குலே — இங்கே
இருப்பதில் என்ன மனக்குறை ?

**கார் :** நல்லறம் நாட்டுக இவ்விடம் — எம்மைப்
பிரிந்து நடப்பதும் எவ்விடம் ?



## காட்சி - 10

உறுப்பினர்கள் : மலையப்பன், மாதரசி
இடம் : மாதரசி இல்லம்

மலை: பணத்தினை எடுப்பாய் ! கணத்தினில் கொடுப்பாய் !
மனத்தினில் செருக்கோ ? முகத்தினில் முறுக்கோ ?
மணந்தவன் மொழிகிறான் ; மௌனம் என்னடி ?

மாத: பிணைந்த உறவினால் பேசுகின் றீரோ ?
யாரை ஏய்க்கிறீர் ? யாரிடம் பாய்கிறீர் ?
ஊரைச் சுற்றி உலாவரு கின்றீர்
இருந்த வேலையை உதறி எறிந்தீர்
திரிந்து வருவதே செய்யும் பணியாம்.
என்றன் அலுவல்கள் எப்போது பார்ப்பது?
பணிமனை செல்ல நேரமோ பத்து
மணியெனக் காட்டும் ; மற்றவை பிறகு !

மலை: அவசரத் தேவைக்கோர் ஐந்நூறு கேட்கிறேன்
அவசியம் வேண்டும் ; அவசியம் வேண்டும் !
பெரிய இடத்தில் பிறந்தவள் அல்லவோ ?
அரியதோ உனக்கும் ? ஆகட்டும் விரைவாய் !

மாத: முடுக்கினால் கொடுப்பாள் என்னும் மிடுக்கோ ?
வெடுக்கெனப் பேசி விரட்டுதல் வேண்டாம் !
அடுக்காச் செயல்கள் அடுக்காய்ச் செய்கிறீர்
தடுக்கலாம் என்றால் தலைக்குமேல் செல்வதோ ?

மலை: சொன்னது செய்வாய் ; சொற்களை அடக்குவாய்
இன்னமும் பொறுக்க என்மனம் ஒப்பேன் !
கொடுப்பதில் உங்கள் கோடியா குறையும் ?
எடுப்பாய் ; விரைவாய் என்னை விடுப்பாய் !

மாத: ஆயிரம் வகையாய் அம்புவிட் டாலும்
கையினில் அரைக்கால் காசையும் தாரேன் !

**மலே:** (பல்லேக் கடித்தபடி)
ஏடி அரக்கி, என்ன சொன்னுய்?
துண்டு துண்டாய்த் துடிக்க வைக்கிறேன்!

(அடிப்பதற்குக் கையை ஓங்குகிருன். மாதரசி யின் பெற்ருேர் அலறிக் கொண்டே ஓடிவருகின் ருர்)

**கார்:** ஐயே... ஐயோ... யாரிது காண்பார்?
கண்ணுல் காணும் காட்சியும் மெய்யோ?
வயிற்றிலே உதித்த வைர மணியை
துயரம் தீர்க்கத் தோன்றிய மகளேக்
கழுத்தை நெறிக்கவோ கைகளே ஓங்கினுய்?

**அண்:** அழகிய விளக்கை அணேக்கவோ துடிக்கிருய்?
நெஞ்சம் பதறுதே நினேவும் சுழலுதே;
அஞ்சும்! அஞ்சும்! ஆருயிர் அஞ்சுமே!

**மலே:** பணத்தினேக் கேட்டால் பாவியென் றுரைக்கிருள்
சினத்தழல் காட்டிச்சிந்தை எரிக்கிருள்;
மறுத்தாள்; வெறுத்தாள்; மனம்போல் பழித்தாள்
பொறுத்தேன் பொறுமையின் எல்லேயில் நிறுத்தினுள்
பொங்கி எழுந்தேன் போர்க்கோலம் கண்டீர்!

**மெய்:** அடாது செய்யும் ஆண்மகன் உன்னுல்
படாது படுகிருள்; பார்க்கவே அவலம்!
நற்குடி பிறந்த நன்மகன் நீயோ?
சொற்களால் அடங்காத் துயரினேக் கொடுக்கும்
கொடுமனம் வாய்ந்த கொடியவன் நீயே;



# காட்சி - 11

உறுப்பினர்கள் : சொக்கழகன், மணிமாறன்.
இடம் : மணிமாறன் இல்லம்

சொ: அருந்தவ நண்பா, என்றன்
ஆறுதல் கேட்ட பின்னும்
சிரந்தனை நிமிர்த்த வில்லை ;
சிரிப்பொலி காட்ட வில்லை !
மரத்தினில் முட்டிக் கொண்டால்
மரங்கூட பேசும் தோழா !
கருத்தினை இழந்த தாலோ
கண்ணையும் மூடிக் கொண்டாய் ?

மணி: குவளைப்பூ விழிகள் செய்யும்
குறும்புகள் காண்ப துண்டோ ?
அவலத்தின் உச்சி சென்றே
அவளைநான் காணு கின்றேன்
சுவைகளே இனிமேல் இல்லை !
சுடுவதே வாழ்க்கை ; நாளும்
கவிமலர் தொடுக்க வில்லை
கண்மலர் தொடுக்க லானேன் !

சொ: புலம்பலே உனக்கு வாழ்க்கை
மணி: புயலிலே படுத்து விட்டேன் !
சொ: மலைமன வலிமை எங்கே ?
மணி: மாமலை காதல் அன்றோ !
சொ: நலமெலாம் எண்ணு யோநீ ?
மணி: நாட்களை எண்ணு கின்றேன் !
சொ: உளறவே பழகி விட்டாய்
மணி: உண்மைகள் பேசு கின்றேன் !

சொ: ஆண்டுகள் பத்திருத்கும் — கண்
அருவிகள் நிற்கவில்லை!
காணவே நெஞ்சடைக்கும் — நண்பா
கண்டும்நான் வாழுகிறேன்!
எத்தனைப் பெண்வீட்டார் — உன்னை
எத்தனை முறைகேட்பார்!
அத்தனைப் பேர்களுமே — தோல்வி
அடைவதில் நீதியுண்டோ?
மாமன் மகளுனக்கு — நம்
மலர்க்கொடி காத்திருப்பாள்
ஊமை அழுகையிலே — ஊரார்
உள்ளம் கரைந்திடுமே!
அத்தை மகளுனக்கு — நாளும்
அல்லி கலங்குகிருள்!
பித்துப் பிடித்தவள்போல் — அவள்
பேசி வருகின்ருள்!
மணி: எந்த முகம் பார்த்தாலும் — நெஞ்சில்
எழுபவள் மாதரசி!
அந்தமுகம் பார்ப்பதல்லால் — மற்ருேர்
அழகுமுகம் பார்த்தறியேன்!
சொ: வயதேறிப் போகுதென்று — பெரியோர்
வாடித் தளர்கின்ருர்!
உயர்வாக எண்ணியெண்ணி — உன்
உறவுக்குச் சுற்றுகிருர்!
பேசா திருப்பாயோ? — பெண்கள்
பேசாமல் வாடுகிருர்
ஏசா திருப்பதற்கே — உன்
இதயம் இரங்கிடுமோ?
மணி: திருமணம் வேண்டாமே — நீ
தேம்பவும் வேண்டாமே
ஒருமுறை காதலித்தேன் — அதுவே
உயிர்விடும் நாள்வரையில்!

# காட்சி - 12

**உறுப்பினர்கள் : மாதரசி, மலையப்பன்.**

**இடம் : மாதரசி இல்லம்.**

**மாத:** நினைத்தாலே வெடிக்கும் நெஞ்சம் ;
நிகரிலாத் துயர வெள்ளம் !
மனத்தாலே தாங்க லாற்றேன்
மாபாவி குமுறு கின்றேன்!
அணைத்ததே இரண்டு கண்ணும்
ஆயிரம் அருவிக் கண்ணீர் !
எனைத்தாங்க இனியார் உள்ளார் ?
எந்தையே தாயே என்பேன் !

**மலை:** எதிர்பாரா விதத்தில் பெற்றோர்
இருவரும் மாண்டு விட்டார்;
அதனையே எண்ணி எண்ணி
அழுவதால் மீள்வா ருண்டோ?
உதவலாம் என்றால் இங்கே
ஒருகாசும் இல்லை ஐயோ !
இதையெலாம் எண்ணிப் பார்த்தால்
என்தலை சுழலு தையோ !

**மாத:** பெற்றவர் மாண்டா ரென்ற
பிரிவினால் நொந்தேன் ; நீரோ
சுற்றிலும் பணத்தைத் தேடித்
துயர்படு கின்றீர் வீட்டில் !
சற்றுமென் கண்ணீர் உம்மைத்
தாக்கவே இல்லை ; ஆனால்
நெற்றியில் கண்ணீர் காட்டி
நெருங்கிய ஊரை ஏய்த்தீர்!

**மலை:** எடுக்கலாம் இருந்தால் என்றே
எங்கெங்கும் தேடிப் பார்த்தேன்

படுக்கவே இல்லை; கரைப்
பட்டியல் பார்த்துப் பார்த்து
மிடுக்கெலாம் அழிய லானேன்!
மிகுந்திடும் கடனுக் கிங்கே
கொடுத்தவர் கேட்க லானர்;
கூறிடும் விடைதான் என்ன?

கடனையே அதிகம் வைத்துக்
கண்ணினை மூடி விட்டார்
விடநாகம் கடித்தால் கூட
விடத்தினை இறக்கலாகும்
கடன்காரர் தொடர்ந்து விட்டால்
களித்திடல் இனிமேல் உண்டோ?
உடனிருந் தால்உன் தொல்லை
உயிரினை எடுக்கும் என்னை!

மாத: பட்டினை அணிந்த போதும்
பணத்தினில் புரண்ட போதும்
மட்டிலாக் கோடி கோடி
மகிழ்ச்சியைக் கண்ட நீங்கள்,
பெட்டியில் உள்ள செல்வம்
பிரிந்ததென் றறிந்த தாலே
கட்டிய மனைவி இன்று
கசந்தவ ளாகி விட்டாள்!

தொட்டெனை மணந்த நாளில்
தோன்ருத எண்ணம், பெற்ருேர்
விட்டெனைப் பிரிந்த போது
விளைந்ததே உங்கள் நெஞ்சில்!
தொட்டிலில் வளர்த்தோர் மாண்ட
துயர்கேட்டும் சாக வில்லை
சுட்டது போல்நீர் சொன்ன
சொற்களால் செத்து விட்டேன்!

மலே: ஏழையாய் ஆகி விட்டால்
ஏற்பார்யார் உன்றன் பேச்சை?
வாழவே இயலா மாதே
வருகிறேன்; மறப்பாய் என்னை!

மாத: ஏழையை நோக்கி மீண்டும்
ஏன்நீங்கள் வருகின் றீர்கள்?
ஏழைகள் என்ருல் மண்ணில்
எத்தனை இழிந்த பேச்சு!

ஆணுக்கும் மேலாய்ப் பாரில்
அரும்பணி செய்வார் பெண்கள்;

காணுங்கள் என்றே அன்ருள்
கல்லூரி மேடை தன்னில்
வீணுக்கு வாதம் செய்தேன்;
விளைவினை இன்று கண்டேன்
ஆணெல்லாம் இவர்போல் வாய்த்தால்
அணங்குகள் செய்வ தென்ன?



# காட்சி - 13

**உறுப்பினர்கள் : மாதரசி, மல்லிகா**

**இடம் : மல்லிகா இல்லம்**

**மல்:** என்னருமை மாதரசி, தோழி வாவா!
என்நினைவும் வந்ததுவோ? அடியே, உன்னைக்
கண்ணருகே பார்ப்பதற்குத் துடித்து நின்றேன்
கரைகாணு ஆவலினைத் தீர்த்து விட்டாய்!

**மாத:** உன்னுள்ளம் பேரன்பில் தோய்ந்த உள்ளம்
உளமார நட்புறவு வளர்க்கும் வெள்ளம்!
என்னையின்னும் மறக்காமல் நினைக்கின் ருயே
இதுபோது மடி மல்லி, தேனும் வேண்டேன்!

கல்லூரி நாட்களிலே என்னைக் கண்டு
கனகமணி தேவியடி என்பா யே!அச்
செல்வத்தேர் முறிந்ததடி! இன்று நானே
தெருவோரம் நடந்துவந்தேன்; அதனுல் என்னை
நில்லென்று சொல்வாயோ? யாரென் பாயோ?
நெஞ்சத்தில் அஞ்சியஞ்சி அடியெ டுத்தேன்
சொல்லுக்குச் சொல்அன்பைப் பொழிந்து விட்டாய்
தோழியென்ருல் உன்னைப்போல் இருக்க
வேண்டும்!

**மல்:** பிள்ளைகளை அழைத்துவரக் கூடா தோ? நீ
பெற்றவர்கள் எத்தனைப்பேர்? பெயர்கள் என்ன?
கள்ளமிலா உன்நெஞ்சைக் கவர்ந்து கொண்ட
கணவரையும் காணுமல் வியப்புற் றேனே!

**மாத:** வெள்ளையுள்ளம் படைத்தமல்லி, எனது வாழ்வின்
வேதனைகள் அறியாயோ? இன்பம் எல்லாம்
கொள்ளையிட்ட காலத்தை என்ன சொல்வேன்?
குண்டடிகள் பட்டபுரு நானே தோழி!

துணையில்லை; பெற்றோர்கள் மாண்ட பின்னால்
தூக்கமில்லை; தொகைதொகையாய் வைத்தி ருந்த
பணமில்லை என்றவுடன் கணவர் பார்வை
படவில்லை; என்னுடனே வாழ்வ தற்கும்
மனமில்லை; ஆதலினால் வாழ்வில் இன்ப
மணமில்லை; சொத்திழந்த பின்னால் கூடும்
இனமில்லை; உடல்நலமும் இல்லை; இன்பம்
இனியில்லை என்பதிலே மிகையே இல்லை!

மல்: உண்மையுடன் காதலித்த மணிமா றன்உன்
உள்ளத்தில் பதியவில்லை; புறக்க ணித்தாய்!
கண்ணீரில் குலைகின்றாய்; அன்றே அன்புக்
காதலினை ஏற்றிருந்தால் வாடு வாயோ?

மாத: (பெருமூச்சு)
பெண்மையென்ற ஆணவத்தால் வரம்பு மீறிப்
பேசிவிட்டேன், என்னென்ன துயர்பட் டாரோ?
கண்ணிருந்தும் குருடாகி நின்று விட்டேன்
கலங்குவதால், புலம்புவதால் மன்னிப் பாரோ?

மல்: ஆணுக்கும் மேலாக உலகம் காக்கும்
அறிவுடையார் பெண்குலத்தார் என்று சொல்வாய்!
நாணிக்கண் புதைத்தார்கள் அன்றே ஆண்கள்;
நல்லதிறம் பெற்றிருந்தும் துயருற் றாயே!

மாத: ஆணுக்கும் மேலாகப் பெண்கள் என்றும்
அணங்குக்கும் மேலாக ஆண்கள் என்றும்
வீண்வாதம் பயனில்லை; ஆணும் பெண்ணும்
வேறுபடா திணைந்தால்தான் உலகம் வாழும்!
சிற்றூரில் மருத்துவர்கள் இல்லை; என்றன்
தேய்ந்தஉடல் நலங்காண நகரம் வந்தேன்!
கற்றுவந்த முன்னாளின் தோழி உன்னைக்
கண்டறிந்து போவதற்கே விரும்பி வந்தேன்!

## காட்சி - 14

உறுப்பினர்கள்: மருத்துவர் அறவாணர், மாதரசி.
இடம்: மருத்துவ மனை

**மாத:** மருத்துவர் ஐயா, வணக்கம்! உங்கள்
மருத்துவம் மேன்மை வாய்ந்ததென் றறிந்தேன்!
நெடுநாள் யானும் நெஞ்சு வலியால்
கடுந்துயர் பட்டே கலங்கி நின்றேன்
இன்றே மருத்துவ மனைக்கு வந்தேன்!

**மரு:** இன்றேனும் வரவேண்டு மென்று தோன்றிற்றே!

**மாத:** குடும்பத் துன்பம் குலைத்த தையா!
உங்கள் குரலைநான் எங்கோ கேட்டதாய்
நினைவுகள் தோன்றுமே! நீண்ட ஆண்டுகள்
அணைத்து விட்டாலும் அந்நாள் நினைவுகள்
சுடர்முகம் காட்டும்!

**மரு:** விளங்கச் சொல்வாய்!

**மாத:** கல்லூரி நாளில் சொல்லாடும் மேடை!
பட்டி மன்றின் பாங்குறு தலைவர்
பொறுப்பினை ஏற்றுப் புன்னகை சிந்தி
நறுந்தமிழ் வழங்கிய நயத்தினை மறவேன்!

**மரு:** ஆண்டுகள் பத்தும் அகன்றதே அம்மா!
மீண்டும் நெஞ்சில்அந் நிகழ்ச்சி மின்னிடும்!
அன்றேஉன் ஆற்றல் அறிந்து போற்றினேன்!
இன்றுநீ மேனி இளைக்கவும் நேர்ந்ததோ?

**மாத:** பொல்லாச் செருக்கால் புழுதியில் புரண்டேன்
நல்லார் ஒருவரை நாணிடச் செய்தேன்
மேடையில் அன்று மிடுக்குகள் காட்டி
ஆடவர் ஒருவர் அடைந்தார் பரிசு!
தூய நெஞ்சினர்! துடிக்கும் திறத்தினர்!

பாயும் உணர்வால் காதலை மொழிந்தார்
நானவர் உணர்வை நறுக்கினேன் வார்த்தையால்!
தேனலை சிந்தையைத் தீக்கிரை யாக்கினேன்!
வென்றவர் தம்மை விரும்பிட நாணி
என்மனச் செருக்கால் எட்டி உதைத்தேன்;
கயமை நிறைந்த கணவனை ஏற்றேன்!
துயரால் இன்று துடிக்கின் றேனே!

மரு: ஐயோ மகளே, அறிவு பெற்றும்
நைந்துவிட் டாயே! நலனழிந் தாயே!



# காட்சி - 15

**உறுப்பினர்கள் : அறவாணர், சொக்கழகன், மணிமாறன்**
**இடம்: மருத்துவமனை**

**சொ:** பெருந்துயர் மூழ்கி மூழ்கிப்
பேசவும் வலிமை இல்லான்
இரும்பினைப் போன்ற மேனி
எறும்பென ஆன தையா!
கரும்பையே காணு நண்பன்
கசப்பெலாம் உண்டு கெட்டான்
மருந்துகள் வழங்கித் தக்க
மருத்துவம் பார்ப்பீர் ஐயா!

**மரு:** சோதனை செய்வோம்; பின்னர்
தொடர்ந்துநல் மருந்தால் நோயின்
வேதனை தீர்ப்போம்; முற்றும்
விலகிடும் வரைக்கும் இங்கே
பாதகம் இன்றித் தங்கிப்
பயன்மிக அடைவீர்; எங்கள்
சாதனை யாலே உம்மைத்
தாக்கிடும் நோயும் வீழும்!

உன்முகம் முன்னர் பார்த்த
உருவம்போல் தோன்றக் கண்டேன்
என்முகம் பார்த்த துண்டோ?

**மணி:** எங்கோநான் பார்த்த எண்ணம்!
என்னுளம் தோன்று தையா!
எங்கேநான் பார்த் திருப்பேன்?
அன்றொரு பட்டி மன்றம்
அங்கோநன் பார்த்த துண்டு!

மரு: கல்லூரிப் பட்டி மன்றம்
கண்டதோர் இளைஞன் நீபோ?

வல்லானுய் வாழ்வாய் என்றே
வாழ்த்தினேன் அந்நாள்! இன்று
சொல்லொணு நோயால் மேனிச்
சோர்வுடன் மெலிந்த தென்ன?

மணி: பொல்லாத காதல் என்னைப்
புழுவென ஆக்கிற் றையா!

மேடையில் வென்ற தாலே
மெல்லிடை வெறுத்து விட்டாள்!
தேடியே சென்ற போதும்
தேம்பிட வைத்து விட்டாள்!
வாடினேன் வருந்த லானேன்
வாழ்க்கையில் எல்லா நாளும்!

மரு: தேடிய நங்கை, மேனி
சீர்பெற இங்கே வந்தாள்!

நேற்றுநான் அவளைப் பார்த்தேன்
நிலாமுகம் சிரிக்க வில்லை!
காற்றினில் மறைந்த உன்றன்
காதலை எண்ணி எண்ணி
ஊற்றுநீர் போலக் கண்ணீர்
ஓடியே வருதல் கண்டேன்!
ஆற்றவே முடிய வில்லை;
அவள்துயர் அளவே இல்லை!

வாழ்க்கையின் இறுதி நாளில்
வஞ்சியாள் உணர்ந்தாள்; நீயோ
ஏக்கத்தால் இளைத்துக் கெட்டாய்;
இவளுக்கோ இதய நோயாம்
பார்க்கவே வருந்து கின்றேன்!

மணி: பண்புடைப் பெரியோய், என்னைத்
தாக்கிடும் நோயைப் பற்றிச்
சற்றும்நான் வருந்த வில்லை!

இறுதியி லேனும் அந்த
இனியவள் உணர்ந்தா ளென்ற
உறுதியைத் தந்தீர் அன்றோ ?
உவகையில் திளைக்க லானேன் !
வெறுப்புடன் இருந்த மங்கை
விரும்பினாள் என்னை என்றால்
இறப்பையும் இன்றே உள்ளம்
இனிமையாய்த் தழுவிக் கொள்ளும்.

மரு: வென்றுநீ பரிசு பெற்றாய்
வாழ்க்கையில் வெல்ல வில்லை !
உன்னிடம் தோற்ற நங்கை
உன்னையே வென்று விட்டாள் !
வென்றபின் கண்ட வாழ்வில்
வெற்றியே தெரிய வில்லை !
இன்னுயிர் வாழ்வை நீங்கள்
இருவரும் இழந்து விட்டீர் !



# யாருக்குப் பொங்கல்

## காட்சி - 1

உறுப்பினர்கள் : அமுதன், முகிலா, பாவாய்.
இடம் : வீட்டு முற்றம்

அமு: பொங்கலோ பொங்கல்!

முகி: பொங்குக! பொங்குக!
எங்கும் பொங்கல் இனிதாய்ப் பொங்குக!
அன்புளம் கொண்ட அத்தான், இந்நாள்
என்மனக் களிப்பினை எப்படிச் சொல்வேன்?

அமு: மனையறம் செழித்திட வாழ்வில் எனக்கே
துணையென வந்த தோகை மயிலே,
தேன்சுவை வழங்கும் திருநாள் கண்டோம்
மான்குலம் போல மனமெலாம் துள்ளும்!

முகி: கொஞ்சும் திருநாள் கோலம் கண்டே
நெஞ்சில் உணர்ச்சி நிறைந்து கிடக்கும்!

அமு: திசையெலாம் மக்கள் சிந்தை மகிழ்வார்!
இசையினைக் கொட்டும் யாழென இதயம்
புதுப்பண் பாடும்! புள்ளினம் தோற்கும்!
மதுவினை உண்ட வண்டெனத் திரிவார்!

(வீதியில் நெல்மணிகளைச் சுமந்தபடி பாவாய் வருகிறாள்.)

முகி: என்னம்மா பாவாய், எழிற்பொங்கல் நலந்தானா ?

அமு: பொன்னிதழின் முறுவலிலே பொங்கல்ஒளி வீசிடுதே !

பா: வீசுவதில் இன்றென்ன விந்தையினைக் கண்டுவிட்டீர்?
பேசுவதில் பூரிப்பும் பேரின்ப மெய்சிலிர்ப்பும்
பொங்கல்திரு நாளன்றிப் பின்னொருநாள் வந்திடுமோ ?
செங்கதிரின் ஒளிபட்டுச் சிரிக்கின்ற நெல்லைப்பார் !
புல்சுமந்து போனவனைப் புகழ்மிகுந்த பொங்கல்நாள்
நெல்சுமக்க வைத்ததனால் நெஞ்சமெலாம்
களிப்புற்றேன்!

அமு: நெல்மணியால் சொல்மணிகள் நீட்டுகின்ற
பெண்மணியே !
எல்லையிலாச் சிறப்பெல்லாம் நெல்லுக்கே என்பாயோ ?

பா: சொல்லுக்குள் பொருள்நின்று சுழல்வதுபோல்
வையத்தில்
நெல்லுக்குள் உயிர்நின்று நிலவுவதை அறியீரோ ?
நெந்நெல்லின் தாய்வீடு சேற்றுநிலம் என்பதனால்
மன்னவர்கள் மணம்பேச வாராமல் போனதுண்டோ ?
கண்ணாடி மாளிகையில் கைவீசி நடந்தாலும்
அண்ணாந்து பார்க்கின்ற ஆண்டிகளின் பானையிலும்
சிரிக்கின்ற நெந்நெல்லின் சிறப்பறிய மாட்டீரோ ?
அரிக்கின்ற நோயனைத்தும் அஞ்சாமல் தான்எதிர்த்து
மனிதகுலம் வாழ்வதற்கே வளர்கின்ற பயிரிதுவாம் !
நிலத்துக்கே அணியென்று நெடும்புகழ்மேல் நிற்கின்ற
குலத்துக்கே திலகமிட்டுக் கூத்தாடும் பொங்கல்நாள் !
நெல்மணியைப் பாராட்ட நேரில்வந்த திருநாளே
சொல்மணக்கும் பொங்கலெனச் சொல்கின்றேன்
தோழர்களே !
இனியும்நான் சொல்லத்தான் வேண்டுமென
நினைப்பீரோ ?

முகி: முல்லையினை மயக்குகின்ற முத்தழகி, உன்பேச்சால்
நெல்லுக்கே தலைசற்று நிமிர்ந்தாலும் நிமிர்ந்திருக்கும் !

அமு: உள்ளபடி, நெல்மணிகள் உயர்வென்றே ஒப்புகிறோம்
துள்ளிவரும் பொங்கல்நாள் நெல்லுக்கே
தோன்றியதோ ?

பா: அதிலென்ன ஐயங்கள் ? அமைதியுடன் சிந்திப்பீர் !
புதிரொன்றும் போடவில்லை; பொங்கல்நாள்
நெல்லுக்கே !

# காட்சி - 2

உறுப்பினர்கள்: **அமுதன், முகிலா, கண்ணம்மா.**
இடம்: **வீட்டு முற்றம்.**

(வீதியில் கண்ணம்மா கரும்பை சுமந்து வருகிருள்)

அமு: கரும்பெடுத்து வருகின்ற கண்ணம்மா, உன்முகத்தில்
அரும்பெடுத்து வருகின்ற அழகுநகை பொங்கலன்ரே?

முகி: இளமையெனும் தேரினிலே எழிலாக வருபவளே
வளமையெலாம் பொங்கலின்று வந்ததனுல்
வாய்த்ததுவோ?

கண்: வண்ணமலர்ச் சோலையிலே வாசமலர் நான்பறித்தேன்
கண்ணிரண்டைப் பறிக்கின்ற கைத்தறியை
அணிந்துகொண்டேன்
ஒயிலாக நடப்பதுவும் குயிலாகக் குழைவதுவும்
பயிலாத நளினங்கள் பாங்காக இழைவதுவும்
செங்கரும்பைச் சந்திக்கும் செழிப்பான பொங்கலினுல்!
மங்கலநாள் மேடையிலே மாப்பிள்ளை செங்கரும்பே!
பல்விழந்த பெரியோரும் பார்த்துமனம் துடிதுடிப்பார்
கல்லுடைக்கும் தோளுடைய காளையரும் காதலிப்பார்!
கோலூன்றும் முதியோரும் குருடர்களும் செவிடர்களும்
காலூன்றி நடக்கின்ற கனிமழலைப் பிள்ளைகளும்
பொங்கல்நாள் வருமபோது புதுக்கரும்பு தேடிடுவார்!
செங்கரும்புத் திருநாளே தேன்பொங்கல் பெருநாளாம்!

அமு: கரும்புக்கே பொங்கலென்று கவிமழையா
பொழிகின்ருய்?

முகி: திரும்புகிற திசைதோறும் செங்கரும்பே தெரிகிறதோ?

கண்: என்பேச்சுக் கசக்கிறதோ? என்கரும்பும் கசந்திடுமோ?
கன்னல் கசந்ததெனில் கைகொட்டிச் சிரியாரோ?

இன்னும் உணராமல் என்னென்ன சிந்தனையோ?
பருவநிலம் பரிசளித்த பாவையரைக் கரும்பென்பீர்!
அருந்தமிழின் சுவைகண்டால் அதற்கும்நீர்
கரும்பென்பீர்!
பணங்கண்டு பல்லிளிக்கும் பழக்கத்தைக்
கொள்ளாமல்
கணத்திற்கோர் குணங்கொள்ளும் கைவரிசை
காட்டாமல்
நரைகண்டால் நாணுமல் பிணிகண்டால் கோணுமல்
சரியாக எல்லோர்க்கும் சமதர்மச் சுவைவழங்கும்!
தித்திக்கும் கரும்பினத்தின் சீர்பாடி நின்றபடி
எத்திக்கும் வரவேற்கும் ஏற்றத்தை மறுப்பீரோ?
என்னைப்போல் இனிமையுடன் எல்லோரும்
வாழ்ந்திடுவீர்
என்றிந்த உலகுக்கே எடுத்துரைக்க வந்ததுவாம்!
போற்றுங்கள் செங்கரும்பை; பொங்கல்நாள்
கரும்புக்கே!
மாற்றங்கள் கொள்ளாதீர்; மருளாதீர் நண்பர்களே!



## காட்சி - 3

உறுப்பினர்கள் : அமுதன், முகிலா, மருக்கொழுந்து.
இடம் : வீட்டு முற்றம்.

(வீதியில் காளை மாடுகளை ஓட்டிக் கொண்டு மருக்கொழுந்து வருகிறான்.)

அமு: மாடுகளை ஓட்டிவரும் மருக்கொழுந்தே, உலகத்தில்
கோடிபொருள் பெற்றதுபோல் குதிப்புடனே
வருவதென்ன?

மரு: பொங்கல் திருநாளின் போதையினால் மயக்குற்றேன்
தங்கமென மாடுகளைச் சாலையிலே அழைத்துவந்தேன்!

முகி: அழகாக மாடுகளை அலங்கரித்து வைத்துள்ளாய்!

மரு: விழியாக நானெண்ணி இமையாகக் காத்திருப்பேன்

அமு: மகிழ்ச்சிதரும் பொங்கலினை மாடுகளும்
உணர்ந்தனவோ?

மரு: இகழ்ச்சியுடன் பேசுவதும் ஏனென்று புரியவில்லை
மாடென்றால் குறைவாக மதித்தீரோ? நாம்வாழும்
நாடென்றால் உரிமையெலாம் நமக்கென்றே
நினைத்தீரோ?
வீடென்றால் செல்வமென மாடுமங்கே வாழ்ந்திருக்கும்
காட்டினிலும் மேட்டினிலும் கழனிவெளிச் சேற்றினிலும்
வாட்டுகிற வெயிலிடையே வருந்தியுடல் உழைக்கின்ற
மாட்டினைப்போல் உயிரினந்தான் மற்றொன்று
சொல்வீரோ?
உண்டகுடி கெடுப்பதற்கே ஒளிந்துவரும் இனமில்லை!
கண்ணெனவே காத்தவரைக் கழுத்தறுக்கும்
மனமில்லை!
ஆறறிவு மானிடரே, ஆணவமே அறியாமல்
சோறளிக்கும் பெரும்பணியில் தொடர்ந்துழைக்கும்
மாட்டினத்தின்

பெருமையெல்லாம் அறிந்தும்நீர் பேசாமல்
இருப்பதுவோ ?
மாடுகளைப் பாராட்ட மகிழ்ச்சிதரும் பொங்கல்நாள்
ஓடிவந்து நின்றதென உணர்ந்திடுவீர் அன்பர்களே !

அமு: மங்கலநாள் மாட்டிற்கே வந்ததென்று மொழிகின்ருய் ?

முகி: விந்தைமிகும் உன்பேச்சு விளங்காமல் குழம்புகிருேம்.

மரு: சிந்தையிலே தெளிவோடு சிந்தித்தே உணர்ந்திடுவீர் !
உழைத்துழைத்துத் தேய்கின்ற ஓருயிரைப் புரியாமல்
பிழையாகப் பேசாதீர், பெருநாளாம் பொங்கல்நாள்
மாடுகளை மகிழ்விக்க வந்ததென்றே பேசிடுவேன் !



# காட்சி - 4

உறுப்பினர்கள் : அமுதன், முகிலா, பட்டம்மா.
இடம் : வீட்டு முற்றம்

(உழத்தி பட்டம்மா கதிரறுத்த வாளைக் கையில் கொண்டு வீதியில் நடந்து வருகிறாள்)

அமு: கதிரறுத்த வாளோடு கைவீசி வருபவளே,
பதர்ஒதுக்கி நெல்குவிக்கும் பட்டம்மா, பொங்கல்நாள்
பொன்னொளியைக் கண்டனையோ? புதுப்பானை
வாங்கினையோ?

பட்: என்னிடமா கேட்கின்றீர்? எனக்கென்றே வந்தவொரு
பொங்கல் திருநாளைப் போற்றாமல் விடுவேனோ?

முகி: உனக்கென்றே பொங்கல்நாள் ஓடோடி வந்ததுவோ?

பட்: எனக்கென்றே இல்லாமல் எவர்க்கென்று வந்ததுவோ?
நாள்முழுதும் உழைப்பதிலே நல்லின்பம்
காண்பவள் நான்
தோளோடு தோள்நின்று கணவனுடன் பணிசெய்வேன்
வியர்வையினை நீராக்கி ஊக்கத்தைத் தழையாக்கி
அயர்வில்லா உழைப்பினிலே அருநெல்லைப் பயிராக்கி
இஞ்சியுடன் மஞ்சளையும் எழில்வாழைக் கமுகினமும்
கொஞ்சவரும் செங்கரும்பும் கோடியெனப்
பொருள்செய்தேன்!
என்னுழைப்பில் விளைந்ததனை எல்லோரும் கொண்டாட
இன்பத் திருநாளும் எனக்கென்றே வந்ததுவே!
பசிபோக்கும் நல்லுணவு பாருக்கே படைப்பதனால்
இசைபாடும் பொங்கல்நாள் எனைப்பாட வந்ததுவாம்!

அமு: உலகத்தில் உழைப்பாரே உயர்வுடையார்
என்றுணர்த்திக்
கலகத்தை மாய்ப்பதற்குக் கனிவாக வந்ததுவோ?

பட்: என்னுழைப்பை வாழ்த்திடவே இப்பொங்கல்
வந்ததென்றால்
உண்மையென ஏற்றிடவே உங்கள்மனம் ஒப்பாதோ?

முகி: கொள்வதும் தள்ளுவதும் குறைநிறைகள்
உணர்ந்தோரே
அள்ளுகிற உன்பேச்சை ஆராய்ந்து பார்த்திடுவோம்!

## காட்சி - 5

உறுப்பினர்கள் : அமுதன், முகிலா, தாமரை, கார்வண்ணன்.

இடம் : **வீதி.**

அமு: சின்னவளே, வீதியிலே சிற்றுடை புழுதிபட
நின்றவளே, விளையாட்டில் நெஞ்சமெலாம்
இழந்தாயோ ?

முகி: ஓவியமாய் எழில்காட்டி ஒளிநகையைச் சிந்துகிறாய் !
தாவுகின்ற இளமானே, தாமரையே, செல்வதெங்கே ?

தா: இந்நாளொரு பொன்னாளென எண்ணாததும் ஏனோ ?
எந்நாளிலும் இதுபோல்கடல் இன்பத்தினைக்
காணேன் !
பொங்குற்றது, பூரித்தது புகழ்கண்டது நாடே
எங்குற்றவர் நெஞ்சத்திலும் எண்ணத்திலும் ஒளியே

அமு: சந்தங்கள் இசைகூட்டித் தடையற்ற அருவியென
சிந்துகள் பாடுகின்றாய் ! சீர்பொங்கல் வரக்கண்டோ ?

தா: தைப்பொங்கல் வந்ததனால் தைதைஎன் றாடுகின்றேன்
எத்திசையும் எனைமயக்கும் இன்பங்கள் காண்கின்றேன்
புத்தாடை சலசலக்க புத்துணர்ச்சி கரைபுரள
செங்கரும்புச் சுவையினிலே சிந்தையெலாம்
சிலிர்த்திடவே
வகைவகையாய்ப் பண்டங்கள் வரிசையுடன் வரவேற்க
நகைபூத்த முகத்தோடு நடமாடி நான்திரிவேன் !

(கார்வண்ணன் வருகிறான்)

முகி: சிரித்துவரும் கார்வண்ணா, செழித்துவரும்
பொங்கலின்று
விரித்துவரும் பேரொளியில் விளையாடிக்
களித்தனையோ ?

கார்: ஓடி யாடித் தோழர் கூட
ஊஞ்ச லாடுவேன் !
கூடிப் பேசிக் கோடி கோடி
கூத்தும் ஆடுவேன் !
தேனில் ஆன லாடு நாவைத்
தீண்டும் போதினில்
மானைப் போலக் குதித்து குதித்து
வானில் தாவுவேன் !

தா: சின்னஞ் சிறுவருக்குத் தேன்சுவையை ஊட்டிடவும்
வெள்ளம்போல் களிப்பினிலே விளையாட்டு காட்டிடவும்
உள்ளமெலாம் இளையவர்க்கே உவகைதரப்
பொங்கல்நாள்
வந்ததென உரைக்கின்ற வாய்மொழிகள் கேட்டிடுவீர் !

அமு: உம்போன்ற இளையவர்க்கே உரியதென இந்நாளைக்
கொண்டுவிட்டீர், குழந்தைமனம் கொண்டவரே,
நன்றுநன்று !

கார்: பொங்கல்நாள் எம்போன்றோர் பூரிக்க வரும்நாளே
இங்கதிலே ஐயங்கள் எள்ளளவும் எமக்கில்லை !



# காட்சி - 6

உறுப்பினர்கள்: அமுதன், முகிலா,
புலவர் பொன்மொழியார்.

இடம்: புலவர் இல்லம்.

அமு: பெரியவரே, பேரறிவு பெற்றவரே, வணக்கத்திற்(கு)
உரியவரே, உலகெங்கும் உவகையிலே
திளைத்திருக்கும்
இந்நாளில் அமைதியுடன் நீர்மட்டும் இருப்பதென்ன?

முகி: எங்களுக்கே பொங்கல்நாள் என்றிங்கே எல்லோரும்
சங்கெடுத்து முழக்குகிறார்; தலையசைத்து
வருகின்றோம்!
புலவர்தரும் புதுக்கருத்தால் புத்துணர்வு கரைபுரளும்
வளநாளில் நெஞ்சுமகிழ் வார்த்தைத்தேன் வழங்கிடுக!

பொ: மனமார்ந்த பொங்கல்நாள் வாழ்த்துக்கள் உரித்தாகும்!
தனந்தேடி உண்பதற்கே தரணியிலே பிறந்ததெனில்
ஆறறிவு மனிதரெலாம் அஃறிணையாய்ப் போய்விடுவார்
மாறுபட்டு மனிதகுலம் விலங்குடனே ஒன்றுபடும்
தொண்டு பிறருக்குத் தொடங்குகின்ற மனம்வேண்டும்
பொங்கல் திருநாளில் பொதுத்தொண்டு தொடங்கிடுவீர்
எங்கும் மகிழ்ச்சியினை எல்லோர்க்கும் வழங்கிடுவீர்!

அமு: ஊருக்கு வந்தவிழா; உணர்ச்சியிலே தங்கவிழா!
சீருக்கு முன்நிற்போர் சிறப்பெல்லாம் தமக்கென்பார்
யாருக்குப் பொங்கல்நாள் என்றறியத் துடிக்கின்றோம்!

முகி: பேருக்கு மட்டுமின்றி பேரறிஞர் உண்மையில்நீர்;
கரும்புதரும் நாளினிலே கருத்தினிலே சுவைதருவீர்!

பொ: எங்களுக்கும் பொங்கல்நாள் என்றுரைக்க முடியாமல்
பொங்கிவரும் கண்ணீரில் புரள்கின்ற ஏழையர்க்கும்
மகிழ்வூட்ட வந்ததுவே மணக்கின்ற பொங்கல்நாள்!
கந்தலுடை மனிதர்க்கும் களிப்புதரும் வகையினிலே

செந்தமிழர்த் திருநாளின் தேன்சுவைகள் பரவட்டும்!
ஏழைக்கும் பொங்கல்நாள் என்னும் படியிங்கு
வாழ்க்கை செழிக்கின்ற வளங்காணத் துடித்தெழுவீர்!
மனவளமும் மண்வளமும் வையத்தில்
இணைந்துவிட்டால்
உணர்வினிலே தேன்பொங்கும்; ஓலங்கள் மங்கிவிடும்!

அமு: நல்லுரைகள் கேட்டறிந்தோம்; நாட்டினிலே
துயரத்தை
வெல்லுவதே தலைப்பணியாம்; விரைந்தேற்றுச்
செயல்படுவோம்!

முகி: பொங்கல்நாள்! எம்நெஞ்சில் புதுக்கருத்துப்
பொங்கும்நாள்!
எங்கும்தேன் பாய்வதற்கே இந்நாளில் சூளுரைப்போம்!



# நேற்று இன்று நாளை

## காட்சி - 1

**உறுப்பினர்கள்: அரசி, பொன்மேனி, கோலப்பன்.**
**இடம்: கோலப்பன் இல்லம்**

**அர:** அண்ணனே, உன்னைத் தேடி
ஆவலாய் ஓடி வந்தேன்!
கண்களை மூடிக் கொண்டு
கனவுகள் காண்ப தென்ன?
மண்ணிலே ஒருத்தி, உன்றன்
மடியிலே வளர்ந்த தங்கை
பண்ணெனப் பேசு கின்றேன்
பார்வைஏன் திரும்ப வில்லை?

வந்தவள் தன்னை நோக்கி
வாய்மொழி பேசி டாமல்
நொந்திடச் செய்தே என்ன
நோன்பினை நடத்து கின்றீர்?
சிந்தையில் பிணக்கோ? உங்கள்
சிரிப்பைஏன் மறைத்து விட்டீர்?
சந்தன மேனி யெல்லாம்
தணலெனக் கொதிக்கு தண்ணா!

**கோ:** என்மனம் அறியாப் பாவாய்
என்னவோ உளறு கின்றாய்!

பொன்மகள் போன போதே
போயிற்றே என்றன் ஆவி!
இன்னமும் இருப்ப தெல்லாம்
எலும்பினை மூடும் தோலே!
நன்மயில் ஆடு கின்ற
நாட்டியம் மறைந்த தம்மா!

ஒருமகள் இழந்தேன்; வாழ்வில்
ஒளியையும் இழந்தேன்; செல்வத்
திருமகள் பிரிந்தாள்; துன்பத்
தீயினில் வீழ்ந்தேன்; அன்புப்
பெருமகள் பறந்தாள்; வாழ்வின்
பெருமைகள் துறந்தேன்; நெஞ்சில்
வருமகள் இல்லை; இங்கே
வாழ்க்கையும் இல்லை யம்மா!

(இடையில் அண்ணி பொன்மேனி வருகிருள்)

பொ: அரசியார வரவா! உங்கள்
அண்ணனைக் காண எண்ணி
விருப்புடன் வந்தாய் போலும்
விளங்கிற்ருே அண்ணன் வாழ்வு?
பொறுப்பிலா அண்ணன் நாளும்
புலம்பலே தொழிலாய்க் கொண்டார்!
மறைந்தவள் மறைந்து போனுள்;
மற்றவர் மறைந்தா போனுர்?

அர: ஆறுதல் கூறித் துன்பம்
அகற்றுவீர் அண்ணி! ஏக்கம்
மீறிய வாழ்க்கை! இன்பம்
மீண்டிடக் காண்பீர்! அண்ணன்
தேறுவார் விரைவில்! நெஞ்சம்
தேம்புதல் நீங்கும்! நல்ல
மாறுதல் தோன்றும்! உங்கள்
மனத்திலும் மகிழ்ச்சி ஊன்றும்!

பொ: களிப்பெலாம் எங்கள் வாழ்வில்
கதைகளாய்ப் போன தம்மா!
இளைத்தது வாழ்க்கை என்ற
இழிநிலை அடைந்த பின்னால்
களைப்பினால் வீழ்ந்து விட்டோம்
கனிவுடன் அணைப்பா ரில்லை!
வளைத்திடும் துன்பம் எங்கள்
வாசலை நோக்கி நிற்கும்!

ஒருமகள் இறந்தா ளென்றே
ஓயாமல் புலம்பு கின்றார்
திருமணம் நோக்கி மற்றோர்
திருமகள் இருத்தல் கண்ணில்
தெரிவதே இல்லை; பெண்ணின்
தேவைகள் நெஞ்சில் என்றும்
வருவதே இல்லை; வஞ்சி
வாழ்க்கைக்கோர் வழியே இல்லை!

கல்லூரி சேர்வ தற்குக்
காத்திருக் கின்றான் பிள்ளை
செல்வதற் கிடமே யின்றிச்
சேர்ப்பதற் காளே யின்றித்
தொல்லைகள் பலவும் பட்டுச்
சோர்வுடன் படுத்து விட்டான்!
இல்லையா இவர்கள் அப்பா
என்றெனை ஊரார் கேட்பார்!

நேற்றெனும் நினைவில் மூழ்கி,
நிகழ்ந்திடும் இந்நாள் வாழ்வைக்
காற்றிலே பறக்க விட்டார்
கண்களை மூடிக் கொண்டார்!
நேற்றுடன் நின்றால் வாழ்க்கை
நேற்றோடு நிற்கும்! கால
ஆற்றிலே எங்கள் ஓடம்
அசையாமல் நின்ற தம்மா!

இன்ெருரு வாழ்க்கை என்று
　　எண்ணமே அவருக் கில்லை!
இன்றுநாள் போன பின்னல்
　　இனியொரு வாழ்க்கை நாளை
உண்டெனும் உணர்வு மில்லை!
　　உள்ளத்தில் நினைப்ப தெல்லாம்
சென்றநாள் நிகழ்ச்சி ஒன்றே!
　　தேய்ந்ததே எங்கள் வாழ்வு!

அர: செல்லாத காசு சேர்த்தோர்
　　செல்வராய் ஆவ தில்லை!
பொல்லாத துன்பம் சேர்த்துப்
　　புலம்பிடும் அண்ணன் நெஞ்சம்
நில்லாமல் விரைவில் மாறும்;
　　நிகழ்காலம் கருத்தில் தோன்றும்;
எல்லோரும் மகிழ்ச்சி காணும்
　　இன்பநாள் வந்தே தீரும்!



## காட்சி - 2

உறுப்பினர்கள் : **அரசி, பூஞ்சோலை**
இடம் : **பூஞ்சோலை இல்லம்**

அர: என்னம்மா பூஞ்சோலை, நலமா? உங்கள்
இல்லறமும் நலந்தானா? என்றன் தம்பி
பொன்னப்பன் முகம்பார்க்க ஆவல் கொண்டேன்
பூரிப்பாய்ப் புறப்பட்டு வந்து விட்டேன்.

பூஞ்: வாருங்கள்! வாருங்கள்! உங்கள் தம்பி
மனைவாசல் எப்படியோ தெரிந்து கொண்டீர்!

யாருங்கள் நல்வரவால் மகிழார் இங்கே?
யாவர்க்கும் பெருமகிழ்ச்சி யளித்து விட்டீர்!
ஓயாமல் துன்பத்தில் உழலும் என்றன்
உள்ளத்தில் ஆறுதலாய் வந்து நின்றீர்
தேயாமல் இருக்கின்ற திண்மை ஊட்டி
தேம்பாமல் இருப்பதற்கோர் வழிகள் சொல்வீர்.

அர: ஒப்பற்ற என்தம்பி துணையி ருக்க
உனக்கின்னல் வந்ததுவோ? என்ன விந்தை!
சிப்பிக்குள் முத்தாகக் காக்கும் அந்தச்
செயல்வீரன் இருக்கையிலே துன்பம் உண்டோ?

பூஞ்: வீரருக்கு வீரத்தில் குறைவே இல்லை
விவேகந்தான் குறைந்ததம்மா; ஆற்றல் மிக்க
சூரருக்கு மனைவியென்ற பெயர்தான் மீதம்
சுடுமணலில் நடக்கின்ற எறும்பு நானே!

குடிக்கூலி தராமையால் சென்ற மாதம்
கோபித்துச் சீறிநின்றார் வீட்டுக் காரர்!
படியேறி அவர்போட்ட சண்டை ஊரில்
பலர்பார்த்துச் சிரிப்பதற்கும் இடமா யிற்றே

இம்மாதம் கைநிறைய வருவாய் பெற்றார்
இருந்தாலும் குடிக்கூலி தரவே இல்லை!

பம்பரமாய்ச் சுழன்றபடி செலவு செய்தார்
பகட்டாகச் செய்ததலால் பயனே இல்லை

பட்டாலே பலசட்டை வேட்டி வாங்கிப்
பளபளக்க ஊர்சுற்றி வருவார்! மேலோர்,
"கெட்டாலே தெரியு"மென்பார்! இவரோ நேற்றுக்
கேட்டபழி மறந்துவிட்டுத் திரிகின் றுரே!

அர: அன்பாக நீதிருத்த முயன்று விட்டால்
அவன்மனந்தான் திருந்தாதோ? இன்ப வாழ்க்கை
நன்ருக நடக்காதோ? அறிவும் பண்பும்
நட்புறவு கொண்டவளே! எண்ணிப் பாராய்!

பூஞ்: எத்தனையோ திருத்தங்கள் செய்தும் வெற்றி
எனைவந்து சந்திக்க முடிய வில்லை!
புத்தகங்கள் வாங்காத கார ணத்தால்
போனதிங்கள் தேர்வினிலே தோற்ருன் பிள்ளை

அடுத்தமுறை வருகின்ற தேர்வில் வெற்றி
அடைவதற்குப் புத்தகங்கள் வேண்டு மென்ருன்
கடுத்தமுகம் காட்டுகின்ருர்! சென்ற தேர்வு
காட்டியதோர் தோல்வியையும் மறந்து விட்டார்!

நாளைவரும் துன்பங்கள் உணர வில்லை
நடுங்கவைத்த நேற்றுநாள் நினைவில் இல்லை
வேளையிது மகிழ்ந்திடுவோம் என்றே இன்று
வேண்டுமட்டும் களிப்பாக செலவு செய்வார்

பொறுப்பின்றி நடப்பதனுல் நாளை வாழ்க்கை
போர்க்களமாய் ஆகாதோ? பலபேர் நேற்று
வெறுப்போடு பழித்தார்கள்; அந்தத் துன்பம்
விலக்காமல் இன்றின்பம் காணல் நன்ருே?

அர: உன்துன்பம் புரிந்துகொண்டேன் என்றன் தம்பி
உள்ளந்தான் புரியவில்லை! அறியா மையால்
பொன்னப்பன் புழுதியிலே கிடக்கின் ருனே?
பொறுத்திருப்பாய் விரைவினிலே திருந்திக்
கொள்வான்!

## காட்சி - 3

உறுப்பினர்கள் : **இசைமொழி, அரசி**
இடம் : **இசைமொழி இல்லம்**

**இசை:** அரசியே வருக ! வருக ! என்றன்
அருமைத் தங்கையே ! ஆருயிர்ச் செல்வமே !
உன்னுடன் பேசி உன்முகம் பார்த்து
நன்னலம் கேட்டே நான்மனம் மகிழ
எத்தனை நாட்கள் ஆயின அம்மா !
இத்தனை நாளும் என்நினை வில்லையா ?

**அர:** அன்பு மிகுந்த அருமை அக்கா
உன்முகம் காணவே ஓடி வந்தேன்
பற்பல நாட்கள் பார்க்கத் துடித்தேன்
உற்ற வேளை இன்று வந்ததே !

**இசை:** அவலம் கேட்டே ஆறுதல் கூறிட
இவ்விடம் வந்த இனியவள் நீயே !
நாளொரு துயரம் நலிந்த நெஞ்சில்
வாளெனப் பாய்ந்து வருந்திடச் செய்யும்
என்மனம் நிறைந்த எண்ணிலாக் கவலைகள்
சென்று மறைந்திடல் தினையள வுமின்றி
முன்னும் பின்னும் மொய்த்துத் திரியும்

**அர:** என்னுயிர் அக்கா, என்செவி கேட்கும்
உன்மொழி யாவும் உண்மைகள் தானோ ?
அத்தான் இருக்கையில் அடிக்கடி உன்றன்
முத்தான கண்ணீர் முகத்தில் தெரிவதேன் ?
நன்கு படித்தவர் நல்லறம் தெளிந்தவர் ;
அன்பும் பண்பும் அமையப் பெற்றவர்
ஆயினும் வாழ்வில் அவலம் தோன்றிட
சாய்க்கும் துயர்கள் தாக்குவ தென்ன ?

**இசை:** கேளாய் அரசி, கிழிக்கும் துன்பம்
தேளாய்க் கொட்டிச் சிந்தையை வாட்டும்

சென்ற திங்கள் செல்வத் திருமகள்
நன்னலம் இழந்து நடுக்கும் நோயால்
நூலாய் இளைத்துப் பாயில் கிடந்தாள்
சேலெனும் விழிகள் செம்மை இழந்தன
உடல்நலம் பெற்றிட மருத்துவர் நாடித்
தொடரும் நோயைத் தொலைத்திடக் கேட்டோம்
" பெண்ணின் உடலில் இரத்தமே இல்லை!
கண்ணுய் அவளைக் காத்திட வேண்டும்
வலிமை யூட்டும் உணவுகள் வழங்குவீர்
நலிவுகள் நீங்கி நலத்தினை யடைவாள் "
என்றே மருத்துவர் எம்மிடம் மொழிந்தார்.

அர: நன்றே சொன்ஞர், நல்வழி அதுவே
நலந்தரும் உணவுகள் நாளும் வழங்கிஞல்
மெலிவுகள் நீங்கும் மிடுக்கும் சேருமே!

இசை: நலிவுகள் தீர்ந்து நன்னிலை கூடும்
ஆஞல் உங்கள் அத்தான் அதனை
வீஞய் எண்ணி வேதனை வளர்ப்பார்
வளந்தரும் உணவுகள் வாங்கி யளிக்க
உளமே யின்றி ஓய்ந்து கிடப்பார்
செல்வ மகளின் திருமணம் நாளை
பல்லோர் போற்றும் பாங்குடன் நடக்க
கைப்பணம் தன்னைக் காத்திட வேண்டும்
இப்பொழு தொன்றும் செலவுகள் வேண்டாம்
என்றே பேசி எதையும் தடுப்பார்!

அர: நன்முறை இதுவோ? நாளை திருமணம்
நடத்திட நலிந்த நங்கையின் உடல்நிலை
திடம்பெற வேண்டாமோ? சீர்பெற வேண்டாமோ?
தகுந்த செலவுகள் செய்யத் தயங்கிஞல்
இகழ்ந்து மாற்ருர் இழித்துப் பழிப்பார்.

இசை: நாளைய வாழ்க்கை நலம்பெற வேண்டித்
தோளில் தவழ்ந்த பேதை மகளின்

இன்றைய வாழ்வை எங்ஙனம் மறப்பது?
முன்னாள் நோயில் முனகிக் கிடந்தாள்
நேற்றும் இன்றும் மறந்து விட்டே
ஏற்றம் நாளை எப்படி அடைவது?

அர: முன்னாள் துன்பம் முற்றும் மறந்தார்
இன்றைய கடமை எண்ணவே இல்லை!
நறுமலர் நாளை மலருமென் றெண்ணி
இன்றைய மலரை இகழ்ந்திடல் தீதே!



# காட்சி - 4

உறுப்பினர்கள் : வாணன், அரசி
இடம் : வாணன் இல்லம்

வா: பிணக்கோடு பேசாமல் சென்றவளே, மீண்டுமென்ன
கணக்கோடு திரும்பியிங்கே கைவீசி வருகின்றாய்?
கணவனையும் வேம்பாகக் கருதிவிட்டுச் சென்றாயே
புகுந்தகத்தைப் பழித்துவிட்டுப் போனஉன்றன் பிறந்தகத்தில்
வகைவகையாய் வாங்கிவந்த சீர்வரிசை என்னென்ன ?

ஒருமூன்று நாட்களிலே உடன்பிறந்தார் சலித்தனரோ?
திரும்பிவந்த உன்வேகம் திகைப்பூட்ட நிற்கின்றேன்!

அர: பிறந்தகத்தின் மயக்கத்தில் பின்னிவைத்த நினைவெல்லாம்
துறக்கின்றேன் நானின்று! தொடுவானம் போலந்தக்
கற்பனைகள் என்மனத்தில் களிநடனம் புரிந்ததெலாம்
பொற்கனவாய்ப் பொய்யுலகாய்ப் போவென்று தள்ளிவிட்டேன்!

வா: வானென்றும் கடலென்றும் மனம்போலப் புகழ்வாயே
தேனாக இனித்ததெலாம் திசைமாறிப் போனதுவோ ?
யார்உன்னைப் பழித்தார்கள் ? யார்உன்னை இகழ்ந்தார்கள் ?
ஊர்சென்று திரும்பியதும் உன்மொழியும் திரும்பியதேன் ?

அர: உடன்பிறந்தார் மனைசென்றேன் ; ஒருசிறிதும் களிப்பில்லை
தொடர்ந்துவரும் துன்பத்தால் சோர்ந்தபடி கிடக்கின்றார்
என்குறைகள் என்னவென்றே எவருமெனைக் கேட்கவில்லை
தம்குறையின் பெருக்கத்தைத் தாமாக அளந்தார்கள்
சிறப்பான வாழ்க்கையிலே திளைப்பார்கள் என்றெண்ணி

முறுக்காகச் சென்றவளின் முகம்வருந்தச்
செய்துவிட்டார்
துரும்பாகிச் சுழல்வதனல் துயரமெனத் துளைக்கிறதே
இரும்பாக மீண்டுமிவர் இருப்பதுதான் எந்நாளோ ?

வா: நிகழ்ந்ததனைச் சொல்லாமல் நீயாகப் புலம்புவதேன் ?
புகழ்ந்தவராய் இகழ்கின்ற பொருளெனக்குப்
புரியவில்லை !

அர: இந்நாளின் வாழ்க்கையினை என்அண்ணன்
மறந்துவிட்டார்
சென்ருண்டு மாண்டுவிட்ட செல்வமகள் நினைவினிலே
இருக்கின்ருர் ! நாளைவரும் எதிர்காலம் தோன்றவில்லை
உருக்கமுடன் அண்ணியார் உரைத்ததெலாம்
கேட்கவில்லை !
மற்ருெருபெண் மணநாளை எதிர்பார்த்து நிற்கின்ருள்
சற்றுமவர் நெஞ்சத்தில் ஆர்வமே எழவில்லை !
எனக்கிளைய தம்பிமனம், இன்றையநாள்
வாழ்வொன்றே
தனக்கின்பம் என்றெண்ணித் தரங்கெட்டே
அலைகின்ருன்
வறுமையிலே நேற்றிருந்த வாழ்க்கையினை
மறந்துவிட்டான்
அறிவிழந்த காரணத்தால் அடுத்துவரும் துன்பங்கள்
நாளைக்கே தாக்குமெனும் நல்லுணர்வே தோன்றவில்லை
வாழுகின்ற என்அக்கா வாடுவதைக் கேட்டீரோ ?
அத்தானே நல்லவர்தான் ; ஆனாலும் அவர்படைத்த
சொத்தாலே இன்றுள்ள துயரத்தைப் போக்காரே!
சென்றுவிட்ட நாளெல்லாம் செல்லரித்துப்
போய்விடுமோ ?
என்னபிழை நேற்றுவந்த சின்னபிழை என்றறியார்
இன்றுபிழை நீக்கிடவும் இனியமனம் அங்கில்லை
நாளைவரும் வாழ்க்கைக்கே நலமெல்லாம்
வேண்டுமென்று
வேளையினை எதிர்பார்த்து வீற்றிருக்கும் மனிதரவர் !

வா: உடன்பிறந்தார் வாழ்க்கையினை ஓடிப்போய்ப்
பார்த்துவிட்டாய்
இடையூறு மிகுந்திருக்கும் இல்வாழ்க்கை
நடத்துகின்றார் !
ஆகையினால் நீதிரும்பி அவசரமாய் வந்தனையோ?

அர: வேகமுடன் வந்ததற்கு விளக்கங்கள் கேட்டிடுவீர்
குறையோடு வாழ்வோரின் குடும்பத்தைப்
பார்த்தபின்னால்
நிறைவோடு வாழ்வதற்கு நெஞ்சத்தில்
துணிந்துவிட்டேன்
சென்றநாள் வாழ்க்கையிலே செய்துவிட்ட
பிழையெல்லாம்
இந்நாளில் திருத்துவதே ஏற்றமிகு செயலாகும்
கடமைகளை இன்றுநாம் கருத்தாக ஆற்றிவந்தால்
நடந்துவரும் நாளையநாள் நன்னாளாய் மாறிவரும்!
பிணக்கோடு நேற்றுசென்ற பெரும்பிழையைத்
திருத்திடவே
இணக்கமுடன் இன்றிங்கே திரும்பிவந்து நிற்கின்றேன்
மறவாமல் கடமைகளை மனமார இன்றுசெய்வேன்
சிறப்பான 'நாளை'க்குத் திறப்புவிழா நடத்திடுவேன்!

வா: வாழ்ந்திருந்த காலத்தும் வரிசையிட்டார்
உடன்பிறந்தார்
தாழ்ந்துவிட்ட காலத்தும் தளராத சிந்தனைகள்
உன்மனத்தில் ஊன்றவைத்த உதவியினை
வாழ்த்துகிறேன்!



# சில திறனாய்வுகள்

**மோகனரங்கன் கவிதைகள் :**

கவிதைகளுள் பல ஓசை யின்பத்திற் காகவே திரும்பத் திரும்பப் பாடி மகிழுமாறு தூண்டுகின்றன. எல்லாக் கவிதைகளும் உணர்ச்சி வளமும் பொருட் பொலிவும் உடையன.

—டாக்டர். மு. வரதராசனார் அவர்களின் அணிந்துரை.

"காலமெனும் மலையிடையே கவிதை ஒரு தேனருவி" என்று இனிமை ததும்பக் குறிப்பிடும் மோகனரங்கன் தமது உணர்ச்சிகளை அந்த அருவியாக்கப் பெரிதும் முயன்றுள்ளார். நாடு என்றால் என்ன? என்ற கேள்விக்கு எத்தனையோ விளக்கங்கள் கேட்டோம்; இவரும் ஒன்று கூறுகிறார் :

தொண்டிற்கு வாய்த்திட்ட பேறு—நம்
தோழர்கள் எல்லோர்க்கும் கூறு

நாடு என்பது நாம் தொண்டு செய்தவற்குக் கிடைத்த வாய்ப்பாம்; அந்த வாய்ப்பு மற்றவர்கட்கும் கிடைக்க வேண்டுமாம். எனவே முழக்குகிறார், "நம் தோழர்கள் எல்லோர்க்கும் கூறு..." புகழைப் பிறரோடு பகிர்ந்துகொள்ள எந்த மனிதரும் ஒப்புவதில்லை. கவிஞன் ஒருவனே அதையும் பிறரோடு பகிர்ந்து கொள்வான். அவனே இங்கு பேசுகிறான்......

—பேராசிரியர், டாக்டர். சாலை இளந்திரையன்
(முஸ்லிம் முரசு)

திருமணத்திற்கு முன்பே பருவத்தேன் குடித்துவிட வேட்கை கொள்ளும் அன்புக் காதலனிடம்,

"தாகமுடன் வருவோர்க்குத் தணிக்கும் கேணித்
தண்ணீராய் நினைத்தீரோ பெண்கள் வாழ்வை"

என வினாத் தொடுக்கும் வேல் விழியைப் படைத்த ஆலந்தூராரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். மே தின வாழ்த்துக் கவிதையில் உழைப்பவர் திறனும் உவமையின் திறனும் ஒருங்கிணைந்து காணப்படும் ஒப்பற்ற கவிதையின் திறனைக்கண்டு வியக்கின்றோம். வாய்மையின் வெற்றி என்னும் கவிதையில், "திருடனின் பின்னே சென்றால் திருக்குறள் சிரித்திடாதோ? என்ற வரி அவரது கவியெழுதும் முயற்சிக்குக் கிடைத்த முழு வெற்றியாகும். —காஞ்சி

மோகனரங்கன் நோக்கிலும் சிந்தனையிலும் புதுமை இருப்பதைச் சில பாடல்கள் உணர்த்துகின்றன. இசைப்பதற் கேற்ற இனிய பாடல்களாகவே இவர் பல கவிதைகளை இயற்றி யிருக்கிறார்.

—தாமரை

கவிதைப் பூஞ்சோலையில் புகுந்து மணங்கமழும் மலர்களை அள்ளிச் சொரிகின்றார் கவிஞர் மோகனரங்கன். நாட்டுக்கும் மக்களுக்கும் பயன் விளையக்கூடிய பாடல்கள் இடம் பெற்றுச் சிறப்பாக உள்ளன.

—நவசக்தி

இன்றைய இளங்கவிஞர்களுக்கு இவர் ஒரு வழிகாட்டி.

க. ஸ்ரீ. ஸ்ரீ. (சுதேசமித்திரன்)

**வைர மூக்குத்தி :**

நான்கு நாடகங்களும் நல்ல கதையமைப்பு, எளிய கவிதைகள், இனிமையான நடை, அழகான உவமை நயங்கள், கருத்துச் செறிவு, கற்பனை வளம் ஆகிய அனைத்தும் கொண்டு சிறப்பாக வெளிவந்துள்ளன.

—தினமணி

இசையழகும் பொருள் அமைதியும் நிறைந்த கவிதை ஒருபுறம், சுவையான கதை நிகழ்ச்சி நிறைந்த நாடகம் ஒரு புறம் என்று இரட்டிப்பு அழகு நிறைந்த நூல்.

—சென்னை வானொலி நிலையம்

**சித்திரப் பந்தல் :**

இளங்கவிஞர் திரு. மோகனரங்கன் அவர்கள் யாப்பிலக் கணப் பிழையின்றி இயற்றியுள்ள பாக்களின் தொகுப்பாகிய இந்நூலை நன்கு வரவேற்றுத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத் துகிறேன். இளங்கவிஞரையும் அன்புடன் பாராட்டி வாழ்த்து கிறேன். வாழ்க கவிதை.

—பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார் எம்.ஏ.

சித்திரப் பந்தலுக்குள் எழில் உண்டு; யாழ் உண்டு; தேன் உண்டு; உறவு உண்டு; அமைதி உண்டு; அரங்கம் உண்டு; கனிகள் உண்டு—அத்தனையும் கற்கண்டு. சித்திரப் பந்தல் செந்தமிழ் அன்னைக்கு ஒரு சிங்காரப் பந்தல்; ஆலந்தூர் கவிஞருக்கு ஒரு புகழ்ப்பந்தல்.

—காஞ்சி

இசை நயத்தோடு எளிய சொற்களைக் கோத்து இனிய பாடல்கள் இயற்றுவதில் வெற்றிகரமான முன்னேற்றம் கண்டி ருக்கிறார் கவிஞர்.

—தாமரை

**காலக்கிளி :**

கவிதை என்பது குளிர்நிழலும் தென்றல் இன்பமுந் தரும் தண்மலர்க்கா மட்டுமன்று, கண்ணுக்கினிய அழகும் நறுமணமும் தரும் பூஞ்சோலை மட்டுமன்று, இன்னுணர்வூட்டி உயிரின்பம்தரும் பழத்தோட்டமும் ஆகும் என்பதனைக் கவிஞர். ஆலந்தூர் கோ. மோகனரங்கனின் காலக்கிளி காட்டுகிறது

—பன்மொழிப் புலவர். கா. அப்பாத்துரையார்

**கனவுப் பூக்கள் :**

சொற்கள் இளைய கவிஞருக்கு ஏவல் செய்து நிற்கின்றன. ஒலி பொருள் என்னும் இருகை வீசி அச்சொற்கள் கவிதை அணிவகுப்பு செய்வதைப் பார்ப்பதே ஓர் இன்பம். இளைய கவிஞர் மோகனரங்கனுக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.

—பேராசிரியர், டாக்டர். சாலை இளந்திரையன்

பண்பட்ட கவிஞர் இவர் என்பதை எல்லா எண்சீர் விருத்தங்களும் எடுத்துக் காட்டுகின்றன. கவிஞர் பாராட்டுக்குரியவர்.

—நூலகம்

கனவுப்பூக்கள் சமுதாயத் தோட்டத்தில் மலர்ந்திட்ட புரட்சிப் பூக்களே. ஆலந்தூராரின் அரிய முயற்சி வெல்க.

—குயில்

தேனுண்ட வண்டுபோல் இந்தக் கவிதைத் தேனில் மூழ்கிக் குளிக்கலாம். தொடக்க முதல் இறுதிவரை சுவை குன்றமல் போகப்போக விறுவிறுப்பை ஏற்றியுள்ளார்.

—மாலை முரசு

**புது மனிதன் :**

கவிதை நாடகங்களின் தொகுப்பே இந்நூல். இத்தொகுப்பில் உள்ள "அமைதி" என்னும் நாடகத்தில் நானே நடித்திருக்கிறேன். கவிதைக்கு உணர்ச்சி முக்கியம். அந்த உணர்ச்சி அன்பர் மோகனரங்கன் அவர்களிடத்திலே நிறைந்திருக்கிறது. அவர்களின் இத்தொகுப்பு எனக்கு மிகுந்த நம்பிக்கை யளிரிபதாக அமைந்துள்ளது. இக்கவிதை நாடகங்கள் கல்லூப் மாணவர்கள் நடிக்கத் தக்கவையாகும். உணர்ச்சியோடு நடிக்கும் ஆற்றல் வாய்ந்த மாணவர்கள் நல்ல முறையில் இந்நாடகங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறேன்.

—தாமரைச் செல்வர் தி. க. சண்முகனர் எம்.எல்.சி.

கிடைக்குமிடங்கள் :

1. **வசந்தா பதிப்பகம், ஆலந்தூர், சென்னை-16.**
2. **பாரி நிலையம், பிருட்வே, சென்னை-1.**
3. **தமிழ்ப் புத்தகாலயம். சென்னை-5.**

